## A WORD OF THANKS.



In placing before the public, this small booklet, I have been enabled by the learned **AUTHOR**, to discharge, though in a very microscopical measure, a duty which was placed on me of bearing the **DHURAM**(धुरं)of the **DARSANAM** (दर्शनं) which has been expounded herein, and since the publisher permits me the opportunity for handsomely expressing my gratitude, I venture to record and acknowledge my sense of deep obligation to the Author and the other Acharyas who have been good enough to thus bless me.

**R. Rangaswami Aiyangar,**
Tanjore.

ஸ்ரீ:

இந்தப் ப்ரசுரத்தின் பரத்தை ஏற்று உபகரித்த **ஸ்ரீ ரங்கஸ்வாமி அய்யங்கார்** ஸ்வாமியினிடத்தில் அடியேன் மாத்திரமன்று அபிஜ்ஞஸஜ்ஜநகோஷ்டியே க்ருதஜ்ஞமாயிருக்கக் கடமைப்பட்டிருக்கின்றது. உத்தம சாஸ்த்ரார்த்த ருசியும் ஔதார்யமுமுள்ள இப்படிப்பட்ட மஹான்கள் பலர் க்ருபை செய்வார்களாகில் இவ்விதம் இன்னும் பல ப்ரசுரங்கள் வெளிவரவிருக்கின்றன.

இப்ரசுரத்தின் சோதந பரத்தை ஈஷத்தும் அடியேனுக்குக் கொடாது தானே வஹித்த பண்டிதோத்தம மதுராந்தகம் **ஸ்ரீ தி. ஈ. வீரராகவாசார் ஸ்வாமி**யினிடத்திலும் அடியேன் க்ருதஜ்ஞன்.

இப்ரசுரத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கும் விஷயம் அதிக ஹநமானது. இயன்றவரையில் அடியேன் எளிய நடையிலேயே எழுதியிருக்கின்றேன். ஆயினும் விஷய காம்பீர்யத்தால் நிரூபணம் கடினமாகவே புலப்படலாம். ஆழ்ந்து, ஒன்றுக்கு இரண்டு தடவையாகப் படித்தால் எல்லோருக்குமே விஷயம் புலனாகுமென்று அடியேன் நினைவு.

**இதன் ஸாரம்:**

1. ஸர்வேச்வரன் ப்ரதிவஸ்து பூர்ணன் என்கின்றன சாஸ்திரங்கள்.

2. எங்கும் வ்யாப்தமாய் அபரிச்சின்னமான பரமாத்ம ஸ்வரூபம், ஒவ்வொறு வஸ்துவிலும் எப்படி பூர்ணமாய் இருக்க முடியுமெனில் பூர்ணத்வமாவது ஸ்வரூப

ஸமாப்தி, அதாவது பரமாத்ம ஸ்வரூபம் முழுவதுமே ஒரு வஸ்துவில் அடங்கிவிடுவது என்பதல்ல. இப்படி ஒப்புக்கொண்டால் பஹிர்வ்யாப்தி இல்லாமற் போகும். பின் என்னவெனில் ஒவ்வொரு வஸ்துவிலுமுள்ள ஏக தேசமே ஸர்வத்தையும் ஸாதிக்கக்கூடிய சக்தியுள்ளதா யிருக்கை. இது ச்ருதப்ரகாசிகையிலும் உபய ஸம்ப்ர தாய க்ரந்தங்களிலும் கூறப்பட்டிருக்கின்றது.

3. ஒவ்வொரு வஸ்துவிலும் ஸ்வரூப ஸமாப்தி பஹிர் வ்யாப்தி இரண்டும் பரமாத்மாவுக்கு அகடிதகடநா சக்தி யாலே கூடுமென்பது ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்தத்தி லுள்ளோர் இசையக் கூடியதன்று.

4. ஆனால் நையாயிகாதிகள் இசைந்த ஜாதிபோல் ஸர் வேச்வர ஸ்வரூபம் ஒவ்வொரு வஸ்துவிலும் பரிஸமாப்ய வர்த்திக்கிறதென்று ஸ்ரீ பாஷ்யகாரர் ஸாதிப்பதின் கருத் தென்னவெனில் ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்துவை அபேக்ஷிக்காமல் அது இருக்கின்றது, தோன்றுகின்றது என்று கருத்தென்க. இவ்வித பூர்ணத்வம், முன் சொன்ன குணத: பூர்ணத்வம் எல்லாம் ஸ்ரீ ந்யாய ஸித்தாஞ்ஜநத்தில் ஸாதிக்கப்பட்டிருக்கிறது.

வ்யய௵
பங்குனிமீ 24௳

திருமலைதாஸம்.

ஸ்ரீ:

# முகவுரை.

—❀—

நாராயண சப்தார்த்தத்தை நிரூபணம் செய்யுமிடத்தில் அந்தர்வ்யாப்தியாவது—'ஆகாசம் கடாதிகளிலே வ்யாபிக்குமாபோலே தன் ஸ்வரூபைகதேசங்களாலே வ்யாபிக்கையன்றியிலே, ஜாதி வ்யக்திதோறும் வ்யாபிக்குமோபாதி ஸமாப்ய ஆத்மதயா வ்யாபித்து தரிக்கை', என்பதாக பரந்தரஹஸ்யத்திலே ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்கிறார். 'ஆகாச த்ருஷ்டாந்தம் அந்தர்வ்யாப்திக்குச் சேராது' என்பதாக இவ்வாசார்யன் திருவுள்ளம்.

**(1) आकाशमेकं हि यथा घटादिषु पृथग्भवेत्। तथात्मैको ह्यनेकस्थः।**

ஆகாசம் கடாதிகளிலே வ்யாபிக்குமாபோலே அந்தர்வ்யாப்தி எம்பெருமானுக்கு என்கிறது ப்ரமாணம். ஆகாசத்திற்கு ஸ்வரூபைகதேசத்தினாலேயே அந்தர்வ்யாப்தி என்பதை இவ்வாசார்யனும் இசைகிறார். நையாயிகாதிகளும் அப்படியே. ஸித்தாந்த லக்ஷணாதிகளில் காண்க. உபயலிங்காதிகரண ஸூத்ர பாஷ்யாதிகளிலும் ஆகாச த்ருஷ்டாந்தத்தைக் கொண்டே அந்தர்வ்யாப்தி ஸமர்த்தனம் செய்துள்ளது.

**'अत एव चोपमा सूर्यकादिवत्' 'वृद्धिह्रासभाक्त्वमन्तर्भावादुभयसामञ्जस्यादेवं दर्शनाच्च'**

என்கிற ஸூத்ரங்கள் முன்கூறிய ஆகாச த்ருஷ்டாந்த வசனத்தை விஷயமாகக்கொண்டவை. 'ப்ருதிவீ முதலியவற்றில் அந்தர்வ்யாப்தி பெறுதலால் ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு நீண்டும் குறுகியும் நிற்கும் நிலைகளில்லை. ஆகாசமானது அவற்றில்

தனித்தனியே ஸம்பந்தம் பெறச்செய்தேயும் அவற்றிற்குள்ள மஹத்வாணுத்வாதிகளை யடைவதில்லை. அப்படியே பரமாத்மாவும்' என்பதாக ஸ்ரீபாஷ்யத்தில் விவரணமுமுள்ளது. அந்தர்வ்யாப்தி யென்பது ஸ்வரூபஸமாப்தியன்று, ஆகாசத்தைப்போலவே ஸ்வரூபைகதேசத்தாலே ஸம்பந்தம் பெறுதலே என்று இதனால் தேறியது.

(2) மிற்க, सर्वव्यापी भुवस्स्पर्शादत्यतिष्ठद्दशाङ्गुलम् ।

என்பதாக ஸ்ரீவிஷ்ணு புராணம். இங்கு ஸ்ரீவிஷ்ணு சித்தீய வ்யாக்யானமுற்று நோக்கத்தக்கது. அதாவது 'இவ் வசநத்தினால் விபூதியில் எம்பெருமானுடைய வ்யாப்தியைச் சொல்லுகிறது, வ்யாப்யமான ஜகத்தைப் பார்க்கிலும், வ்யாபகனான பரமபுருஷன் மஹத்தாக விருக்கிறான். ஆகாசம் கடாதிகளில் வ்யாபிக்கின்றாப்போலே ஈசனுக்குமுள்ள வ்யாப்தி', என்பதாக அங்கு விளக்கமுள்ளது.

(3) अन्यूनश्चाप्यवृद्धिश्च' இத்யாதிகளும் அணுத்வ தீர்க்கத்வாதிகள் அவ்வவ்வஸ்த்வநுரூபமாக ஈசனுக்கு இல்லை யென்கின்றன. (4) अन्तःप्रविष्टश्शास्ता என்கிற ச்ருதியில், ஆகாசத்திற்கும், பரமாத்மாவுக்கும், அந்தர்வ்யாப்தி துல்யையாகையால் ஆகாசவ்யாவ்ருத்தமான வாகாரத்தை 'சாஸ்தா' என்று காட்டியது என்பதாக ச்ருதப்ரகாசிகையிலும், வேதார்த்த ஸங்க்ரஹதாத்பர்ய தீபிகையிலும் பலவிடங்களிலுள்ளது. ஆகவே பெரிய ரஹஸ்யத்திலே பூர்ணத்வமாவது—வஸ்துதோறும் ஸ்வரூபஸமாப்தியன்று என்றருளினார் ஆசார்யன். பரமதபங்கத்திலும் 'ஈச்வரனுடைய ஸர்வ ஸ்வரூபமும் அல்பபரிமாணமான ஏகத்திலேயடங்குமென்றும் பக்ஷத்தில் பஹிர்வ்யாப்தி சொல்லவொண்ணாதென்றார். இதில் க்ருத்ஸ்நப்ரஸக்த்யதிகரண விரோதம் வருகிறதென்கிறார்

தேசிக ப்ரபந்தவுரை யாராய்ச்சிக்காரர். தம் பக்ஷத்தில் க்ருத்ஸ்நாதிகரண விரோதப்ரஸக்தி வருவதை நினைத்திலர். (5) ஸ்வரூபஸமாப்தி கொள்ளவேணும், அல்லது நிரவயவத்வத்தைக் கைவிடவேணும், என்பதாக அவ்வதிகரண பூர்வபக்ஷம். இரண்டுமில்லை யென்பதாக ச்ருதிபலத்தைக் கொண்டு ஸித்தாந்தம் செய்தது. 156 அதிகரணங்களுள்ள சாரீரக சாஸ்த்ரத்தில் பூர்வபக்ஷியின் ஆபாதநத்தை இசைந்து ஸமாதாநமென்பது ஓரதிகரணத்திலுமகிடையாது. (6) மதாந்தரஸ்தரும் ஸ்வரூபஸமாப்தியில்லை என்றே ஸித்தாந்தித்தனர் — (i) न तावत् कृत्स्नप्रसक्तिरस्ति என்றும (ii) शब्दश्चोभयमपि ब्रह्मणः प्रतिपादयति अकृत्स्नप्रसक्तिं निरवयवताञ्च என்றுமிவ்வாறுக ஸ்ரீ சங்கரபாஷ்யம் (iii) न कृत्स्नप्रसक्तिः अप्रच्युतस्वरूपमेव ब्रह्म परिणमते, என்பதாக பாஸ்கர பாஷ்யம் (iv) निरवयवत्वाकृत्स्नोपयोगाविषयश्रुतिबलात् இத்யாதியாதவப்ரகாசவசநம் ச்ருதப்ரகாசிகையில் உதாஹ்ருதம் உரையாராய்ச்சியில் இவற்றைப் பற்றிய ஆராய்ச்சியுரையில்லையே. 'க்ருத்ஸ்நப்ரஸக்தி ஸூத்ரத்தின் பொருளும் இவருக்குத் தலைகீழ் என்பதாக ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா விமர்சத்தில் ஸம்ரக்ஷிணீயின் மூலம ஸ்ரீ உப. வித்வான் ஏ.வி.கோபாலாசார்ய ஸ்வாமியினுல் ஏற்கனவே ஸுப்ரதிஷ்டாபிதமானது.

(7) இபத்திற்காட்டிய ஜாதி த்ருஷ்டாந்தத்திற்கும் ஆராய்ச்சிக்காரர் பக்ஷத்திற்கும் அஹிநகுலங்களுக்குள்ள பரஸ்பரஸம்பந்தமாத்ரமே என்பதையுமுணரவில்லையே.

'பரந்தவண்டமிதென = அந்த ஜல பரமாணுக்கள்தான் பரந்தவண்டமிதெனவாயிற்று. வ்யாபித்திருப்பது ஓரண்டத்தைச்சமைத்து அதிலேயோரேகாகியை வைத்தாப்போலே

யிருக்கும், என்பதாக ஈட்டு ஸ்ரீஸூக்தி வஸ்து வ்ருத்தியி லப்படியன்று என்கிறது என்பது என போலே என்கிற உத்ப்ரேக்ஷையால் ஸூசிதம். 'ஸர்வஸ்வரூபமும் அல்பபரிமாணமான ஏகத்தின் ஏகதேசத்திலே அடங்கிக் கிடப்பதாக' ஆராய்ச்சிக்காரர் நினைவு. ஜாதியானது ஒவ்வொன்றிலும் க்ருத்ஸ்நபாகத்திலும் பரிஸமாப்ய வர்த்திக்கின்றது என்பதாக தீபமும் ஸாரமும், குடத்தின் கழுத்தின் கீழும், படத்தின் நூல் நுணியிலுமாக ஜாதியிருப்பதாகக் கொண்டாலன்றி ஜாதி த்ருஷ்டாந்தத்தில் ஆராய்ச்சிக்காரர் த்ருப்தி பெறுவதற் கில்லை.

(8) ஒவ்வொன்றிலும் ப்ரஹ்மம் பரிபூர்ணமாக விருக்கிற தென்பதாக வேதாந்தஸாரம். ஒவ்வொன்றிலும் பூர்ணமாக இல்லை ஏகதேசத்திலேயே அடங்கிக் கிடக்கிறது என்பதாக வாராய்ச்சி ஸாரம். ஆகவே த்ருஷ்டாந்தத்திற்கோ, தார்ஷ்டாந்திகத்திற்கோ, இவர் பக்ஷத்தில் ஸமந்வயமில்லை.

(9) ஜலநிமக்னமான படத்தை ஜலத்தினால் பூர்ணமென்கிறோம். வ்யாப்யவஸ்துவிற்குப் பூர்த்தியேயன்றி வ்யாபக வஸ்துவின் க்ருத்ஸ்நாம்ச ஸம்பந்தமிங்கில்லை. அப்படியே 'தேநேதம் பூர்ணம் புருஷேண ஸர்வம்' ஜ்ஞானசக்தியாதி ஸங்கோசாபாவரூபம் பூர்ணத்வம் என்றும் மற்றொரு நிஷ்கர்ஷம்.

(10) வாக்யாந்வயாதிகரண ச்ருதப்ரகாசிகையிலும், ஸ்ரீவசன பூஷணத்திலும் இப்படியே உள்ளது. இரண்டும் ஸம்ப்ரதிபந்நம். ஸ்வரூபஸமாப்தி என்பதாக ஸ்ரீபாஷ்யம், தீபம், ஸாரம் முதலியவற்றில் ஓரிடத்திலுமில்லை. பரிஸமாப்தி என்பது ஸ்வபாவபூர்த்திக்கும் சேரும். ஜாதிக்கும் வ்யக்திதோறும் வ்யாவர்த்தகத்வசக்தி பூர்ணதையுண்டு. ஆகவே ஜாதி த்ருஷ்டாந்தமும் இப்பக்ஷத்தில் ஸ்வரஸம். அதற்கு ஸ்வரூபஸமாப்தி என்பது நையாயிகாதிகளுக்கும் ஸம்ப்ரதிபந்நமன்று. ஸர்வ

சந்த்ரியில் காணலாமிதை. ஆகாச த்ருஷ்டாந்தத்திற்குச்சேர ஜாதி த்ருஷ்டாந்த ஸமந்வயம் கொள்ளவேணும்.' उभयसाम्यप्रसङ्गादेवं दर्शनाच्च' என்கிற ஸூத்ரந்யாயமிங்கும் துல்யம்' (11) 'உண்மையில் ஏகத்ரைவ வித்யமாநத்வத்தை ஒப்புக்கொள்ளவில்லையன்றோ' என்பதாக ஆராய்ச்சிக்காரர் தாமே தமது பரித்ராணத்தில் (ப-18) எழுதிவைத்துள்ளார். இவரே ஸ்வரூபஸமாப்திதான் சாஸ்த்ராநுமதமென்கிறார். मध्यसिद्धम्. सूर्यானது சாஸ்த்ராநுமதம் என்கிற ரீதியில் இவர் வாதம். ப்ரஹ்மஸ்வரூபம் பலவன்று. ஒன்றான ஸ்வரூபம் ஒரு வஸ்துவின் ஏகதேசத்திலேயே அடங்கியதென்றால் வஸ்த்வந்தரத்தில் அந்தர்வ்யாப்திக்கும் பஹிர்வ்யாப்திக்கும் ப்ரஹ்மமில்லை என்கிறதாகிறது. இதைத்தான் एकत्रैव विद्यमानत्वं என்பது. ஸாராஸ்வாதிநியிலும் காண்க. 'विप्रतिषेधाच्चासमञ्जसम्' என்கிற ந்யாயம் ஆராய்ச்சியில் பூர்ணம் (12) ஸ்வரூபஸமவ்யாப்தி என்பதாக ஸ்ரீநயினாராச்சான்பிள்ளை சதுச்லோகீ வ்யாக்யாநத்தின் இறுதியில் அருளுகிறார். 'अणोरणीयान्' பரந்ததண்பரவையுள், இத்யாதிகளுக்கு ஸமவ்யாப்தி வாதம் சேருமோ? அந்யூநவ்யாப்தி வேண்டாவோ? (13) பரமாத்வஸ்வரூபத்தில் அணுத்வமுமுண்டு. இது ஔபாதிகமன்று, என்பதுவுமிவ்வாசார்யன் பக்ஷம். अर्भकौकस्त्वात्तद्व्यपदेशाच्च नेतिचेन्न निचाय्यत्वादेवं व्योमवच्च । (14) अभिव्यक्तेरित्याश्मरथ्यः । (15) अल्पश्रुतेरितिचेत्तदुक्तम् । (16) हृद्यपेक्षया तु मनुष्याधिकारत्वात् । (17) बुध्यर्थः पादवत् । (18) अनेन सर्वगतत्वमायामशब्दादिभ्यः ।

இத்யாதி ஸூத்ரங்களின் ஸித்தாந்தத்தைப் பூர்வபக்ஷமாக்கி பூர்வபக்ஷத்தை ஸித்தாந்தமாகக் கொண்டுள்ளாரிவர்.

(19) 'ब्रह्मणो परिच्छिन्नत्वात् स्वत उन्मितत्वासंभवात्' என்பதாக பராதிகரண ஸ்ரீபாஷ்யம். (20) 'இது (அணுபரிமாணத்வம்) சொல்லுமிடம் உபாத்யவச்சேதத்தாலே யென்று

ஸூத்ரபாஷ்யாதிஸித்தம்' என்று பெரிய ரஹஸ்யத்திலும் 'उपाध्यवच्छेदमात्रेण ह्यणुत्वमीश्वरेऽङ्गीक्रियते, न तु स्वरूपतः' என்று சதுச்லோகீ பாஷ்யத்திலும் ஸ்ரீதேசிகனே ஸ்வரூபாணுத்வத்தில் உதாஹ்ருத ஸூத்ரபாஷ்யாதி விரோதம் வருவதை எடுத்துக்காட்டியு மிருக்கிறார். (21) அணுத்வ விபுத்வரூப விருத்த ஸமுச்சயவாதம் ஸம்ப்ருத்யதிகரண ஸித்தாந்த விருத்தமுமாகிறது. ப்ரஹ்மத்திற்கு ஔபாதி கால்பத்வம் சொல்லும் சாண்டில்ய தஹராதி வித்யைகளில் த்யுலோகவ்யாப்தி முதலிய குணங்கள் அநுஸந்தேயங்களாக மாட்டா; விருத்த ஸமுச்சயம் கூடாது என்பதாக அங்கு ஸித்தாந்தம். அகடிதகடநாசக்தியாகிற அணுகுண்டு வைக்கொண்டு பூர்வபக்ஷியை அடக்கி விருத்த ஸமுச்சயம் கொள்ளவில்லை. (22) ஜைநாதிகரண ஸித்தாந்த ஸூத்ர விரோதமும் காண்க. (23) ப்ரபஞ்சமானது ஸத்விலக்ஷணமும் அஸத்விலக்ஷணமுமானது என்பதாக அத்வைதி மதம். யாதவபாஸ்கராதிகள் பேதாபேத வாதத்தை இசைந்தார்கள். ச்ருதிகள் பலவற்றைக்கொண்டே இப்படி ஸித்தாந்தம் செய்தார்கள். விருத்த ஸமுச்சயம் கூடாதென்றே அவற்றை தூஷிக்கிறார்கள் விசிஷ்டாத்வைதிகள். அகடிதகடநாசக்தியால் இவை கூடலாமே என்று அவர்கள் கேட்பரேல் வழியோடு ஸமாதானம் சொல்ல வியலுமோ ஆராய்ச்சிக்காரருக்கு.

यदि चाघटितघटनाशक्त्या विरुद्धद्वयसंभवः,
तदा सर्वाद्वैतभेदाभेदपक्षाभ्यां किमपराद्धम्

என்றும், 'பேதாபேத பக்ஷங்களைக் கழிக்க விரகில்லை' யென்றும், 'விருத்த ஸமுச்சயம் கொள்ளும் பரமதங்களின்படியாம்' என்றும் சதுச்லோகீபாஷ்யம், பரமதபங்கம், பெரிய ரஹஸ்யம் ஆகியவற்றில் ஸ்வாமி தேசிகனே ஸ்மரிப்பித்துள்ளாரிவற்றை. (24) 'விருத்த ஸமுச்சய பக்ஷங்களில் விருத்தஸமுச்சய

நிபந்தநமாக வீச்வரனுடைய அகடிதகடநாசக்தியைக் கொள்ளவில்லை' என்பதாக சதுச்லோகீ வ்யாக்யாநத்தில் ஸமாதாநமிதற்கு. பாஸ்கராதிகள் அகடிதகடநாசக்தியைக் கொள்ளாவிடிலும் அவர்களிசைந்த பேதாபேதாதி மதங்களை அகடிதகடநாசக்தியைக் கொண்டு விருத்த ஸமுச்சயம் கொள்பவர்கள் ஏன் ஏற்கக்கூடாது? அவற்றை தூஷிப்பானேன் என்று ஸ்ரீ தேசிகன் கேட்டருளியதற்கு பாஸ்கராதிகள் அப்படி இசையவில்லை என்பது ஸமாதாநமாகுமோ? (25) அந்தர்வ்யாப்தியை குணங்களையொழியச்சொல்லவேணும். அக்குணங்களுக்கு வ்யாப்யத்வம் சொல்லுமளவில் ஆத்மாச்ரயமும் அநவஸ்தையுமாகிற தோஷங்கள் வரும், என்றார்கள். மாமுநியும் ஸ்ரீபெரியவாச்சான் பிள்ளையும், அகடிதகடநாசக்தியாலே குணங்களிலும் அந்தர்வ்யாப்தி கூடலாமே? ச்ரௌதமான விதை கேவல யுக்திகளால் விலக்கியது 'श्रुतेस्तु शब्दमूलत्वात्' என்கிற ஸூத்ரத்திற்ச் சேருமா என்பதை ஆராய்ச்சிக்காரர் இனி ஆராய்வாராக. (26) பிராட்டிக்கு விபுத்வத்தை ஸ்வாபாவிகமாகவே கொள்ளவேண்டுமென்று ஸ்ரீ ஆச்சான் பிள்ளை ஸித்தாந்திக்கிறார். இது அபிமதமே அணுத்வமுமுண்டென்பதுவும் வைபவவாதமே.

'यथा सर्वगतो विष्णुस्तथैवेयं द्विजोत्तम' என்று ஸ்ரீவிஷ்ணுபுராணம். இதற்கு எங்களாழ்வான் வ்யாக்யானத்தின் நிர்வாஹமாவது:—

'எம்பெருமானைப்போலவே பிராட்டியும் விபுத்வாதிகுணமுடையவள் அல்லது அணுஸ்வரூபையாகிலும் சக்தித்வாரா சொல்லியதென்றும் கொள்ளலாம்' என்று இப்படி விகல்பம் கொள்ளக்கூடாது. ஸமுச்சயமே கொள்ளவேண்டுமென்று ஸ்ரீ ஆச்சான்பிள்ளை ஸித்தாந்தம்.

'शक्तिकालवशादस्याः विभुत्वाद्युपपादकाः ।
प्रच्छन्नस्पष्टजैनाध्वनिरोधादगतीकृताः ॥'

இத்யாதியாக விதற்கு சதுச்லோகீபாஷ்யத்தில் ஆசார்யனருளிய ஸமாதானமிங்கு அநுஸந்தேயம்'.

ஸ்ரீ-உ-வே தி-ஈ சடகோபாசார்யஸ்வாமி தமது அநுபந்தக்ரந்தத்தில் (ப. 38 – 80) பூர்ணத்வ விஷயமாக விபுலமான விசாரம் செய்து ஸித்தாந்தித்திருக்கிறார். அதன் பிறகு ஆராய்ச்சிக்காரஸ்வாமி இது விஷயத்தில் மிகத்தெளிவு பெற்று சாந்தரானமை ஜகத்ப்ரஸித்தம், ஆகவே ஸ்ரீ உ. வே. திருவரங்கம் தாதாசார்ஸ்வாமி ப்ரதிபக்ஷ ப்ரதிக்ஷேபத்திலே ஈஷத்தேனும் கண்ணோட்டம் கொள்ளாமலேயே மநநம்செய்யும க்ரமத்திலே ஸர்வசக்தி என்கிற க்ரந்தத்தை அருளியிருக்கிறார் போலும். ந்யாயமீமாம்ஸாதிகளில் விசேஷ வைதுஷ்யம் பெற்றுள்ள விந்தஸ்வாமி ப்ராசீந நையாயிகாதி க்ரந்தங்களைக்கொண்டு ஜாதி த்ருஷ்டாந்தத்தை மனதில் பதியச்செய்திருப்பது இக் க்ரந்தத்தினால் ஏற்படும் பரமோபகாரமாகும். ஏற்கனவே சிரகாலம் முன்பே 'ஸௌஜன்யபரிமளம் என்பதாகவோர் க்ரந்தம் இந்த ஸ்வாமியால் செய்யப்பெற்றுள்ளது. அதின் ஓர் பகுதியே இந்த ஸர்வசக்தி. இதைக் கடாக்ஷித்துத் தஞ்சைஅட்வகேட் ஸ்ரீஉ.வே. ரங்கஸாமி அய்யங்கார் ஸ்வாமி தாமே ஏகதேசத்தில் இதை முத்ரணம் செய்விப்பதாக முன்வந்திருப்பது மற்றுள்ள தேசிகபக்தர்களான ஆஸ்திக தநவான்களுக்கு வழிகாட்டியாயிருக்குமென்பதில் ஐயமில்லை. இந்த ஸ்வாமியின் நியமநத்தினாலேயே இந்த முகவுரையையும் அடியேன் எழுதலானேன்.

'कार्यः कथाहवकुतूहलिभिः परेषां
कर्णे स एष कवितार्किकसिंहनादः'

**தி. ஈ. வீரராகவாச்சாரியன்,**
ஸ்ரீமதுராந்தகம்.

॥ श्रीः ॥

श्री श्रीनिवासपरब्रह्मणे नमः ।

श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ।

# सर्वशक्तिः ॥

## ஸர்வ சக்தி.



**वेदो यदाह प्रतिवस्तुपूर्णमपूर्णता यत्र न काचिदस्ति ।**
**महस्तदस्तप्रतिमं प्रतीतं यन्मे हितं तद्विदधातु पूर्णम् ॥**

1

### बहुभवनम् ।

### पूर्वपक्षः (பூர்வபக்ஷ:)

"முதலில் ப்ரம்மம் ஒன்றே இருந்தது. பிறகு அது 'பல வாக ஆவேன்' என்று ஸங்கல்பித்து அப்படியே ஆயிற்று" என்று வேதம் ஓதா நின்றது. இங்கு ஒரு பூர்வபக்ஷம்:— அம்சம் அல்லது அவயவம் இல்லாத ஒரு ப்ரம்மம் பல வஸ்துக்களாக ஆக முடியாது. வெவ்வேறு அம்சங்கள் இருக்குமாகில்; ஓர் அம்சம் ஒரு வஸ்துவாகப் பரிணாமம் என் கிற மாறுதலை அடைகிறது; மற்றோர் அம்சம் மற்றொரு பொருளாக மாறுகிறது, என்றிப்படிப் பல பொருளாக ஆக லாம். அம்சங்கள் இல்லாத ஒரே வஸ்து, மாறி ஒரு பொரு ளாக ஆகும்பொழுது, அதுவே மற்றொரு பொருளாக ஆவது எப்படி? ஆகையால் அவயவமில்லாத ப்ரஹ்மம், இவ்வுலகத் திற்குக் காரணம் என்று இவ் வேதவாக்யம் போதிக்கமாட்

டாது. இவ்வாக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக ப்ரஹ்மத்திற்கும் அம்சங்கள் உண்டென்னில் ப்ரஹ்மம் நிரவயவம் (அவயமில்லாதது) என்று கூறும் வேதவாக்யம் ப்ரமாணமன்றென வரும், என்று. 'वह्निना सिञ्चेत्' (நெருப்பினால் நனைப்பது) என்கிற வாக்யம் பொருந்தாத பொருள் கூறுவதால் ப்ரமாணமான வாக்யமன்று. அதேபோல் இங்கும். பொருத்தமுள்ள வேறுபொருள் உரைப்பது யுக்தமே. எவ்விதத்திலும் அகண்ட ப்ரஹ்மம் அறிவுள்ளனவும், இல்லாதனவுமான பலபல பொருளடங்கிய உலகத்திற்குக் காரணமென்பது மேற்குறித்த வேத வாக்யத்திலிருந்து பெறப்படமாட்டாதென்று பூர்வபக்ஷியின் கருத்து. இதற்கு ஸூத்ரத்தில் சொல்லப்பட்ட பதிலாவது—

## 2

## सिद्धान्तः (ஸித்தாந்தம்)

அபௌருஷேயமான வேதத்தில் சொல்லப்படும் பொருள் அப்படியே அங்கீகரிக்கப்படவேண்டும். அகண்ட ப்ரஹ்மமே நாநாவிதமாகப் பரிணமிக்கிறதென்று அது சொல்லுகிறது. அக்னியினால் நனைப்பது என்றவிடத்தில் அக்னிக்கு நனைத்தலென்னும் க்ரியையில் உபயோகப்படக் கூடிய சக்தியில்லை என்பது ப்ரத்யக்ஷத்தினால் நிச்சயிக்கப்பட்ட விஷயம். இப்படிப் பொருத்தமற்ற பொருளை உணர்த்த மாட்டாமையால் இவ்வாக்யம் ப்ரமாணமாகாது. ப்ரஹ்மமானது ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு நிலமல்லாதது. வேதத்தைக்கொண்டே அறியவேண்டிய பொருளாதலால் மேற்குறித்த வேதவாக்யம் தனது பொருளை உணர்த்துவதற்கு முன் अखण्डமான ப்ரஹ்மம் பல பொருள்களாகப் பரிணமிக்க மாட்டாது என்ற நிச்சயம் உண்டாக வழியில்லை. இவ்வித நிச்சயமில்லாதபொழுது இவ் வேதவாக்யம் தனது

பொருளை உணர்த்தத் தடையொன்றுமில்லை. ஆகவே अखण्डब्रह्मம் பலபொருளாகப் பரிணமிக்கிறது என்று வாக்யத்தின் அர்த்தம் அறியப்படும். பிறகு உலகத்தில் நாம் காணும் வஸ்து எதுவும் அகண்டமாயிருந்து பல பொருளாக மாருதிருக்க ப்ரஹ்மம் மாத்திரம் எப்படி மாறும் என்று கேள்வி பிறக்க, ப்ரமாணமான வேதவாக்யம் இப்படிக் கூறுவதால் ப்ரஹ்மத்திற்கு अखण्डமாயிருக்கும்பொழுதே பல விதமாகப் பரிணமிப்பதற்கேற்ற சக்தி உண்டு'என்று கொள்ளப்படும். 'यज्ञेन स्वर्गकामः' என்றவிடத்தில் यज्ञம் ஸ்வர்க்கத்திற்குக் காரணம் என்று தோன்றினபொழுது இப்பொழுதே நசித்துப்போகும் यज्ञத்திற்கு எதிர்காலத்தில் எப்பொழுதோ வரப்போகும் ஸ்வர்க்கத்தைத்தரச் சக்தியேது என்கிற ஸந்தேஹத்தை நடுவில் अपूर्वம் அல்லது पुण्यं என்ற த்வாரத்தைக் கல்பித்துப் பரிஹரித்தார்கள். அவ்விதமே இங்கும் பல பொருளாவதற்கேற்ற சக்தி अखण्डब्रह्मத்திற்கு உண்டெனக் கொள்ளப்படும். உலகத்தில் நாம் காணும் வஸ்துக்களில் ஒன்றிற்கில்லாத சக்தி மற்ருென்றிற்கு இருக்கின்றது. இப்படியே ப்ரஹ்மத்திற்கும் தனிச்சக்தி கூடும். 'परास्य शक्तिः' என்று வேதமே அவ்விதம் கூறிற்று என்றவாறு.

'श्रुत्या निरवयवत्वकार्यत्वप्रतिपादनात्, तदनुगुणशक्तियोगः कल्प्यः । धर्मिवैजात्यं च कल्प्यमित्युक्तम् । इदानीं धर्मिवैलक्षण्य-विलक्षणधर्मयोः कण्ठोक्तिः प्रदर्शिता ।'

என்று ச்ருதப்ரகாசிகையில் இருப்பதை இங்கே காண்பது.

## 3

## शक्तिविशेषः (சக்தி விசேஷம்)

ஸித்தாந்தம் இப்படியிருக்க இதற்குமேல் ஒரு விஷயம் விசாரிக்கவேணும். अखण्डब्रह्म ஸ்வரூபம் ஒரு தனிப்பட்ட

சக்தி விசேஷத்தால் பல பொருளாக மாறினால் ப்ரஹ்மத்திற்கே சிதைவு உண்டென்றதாகும். சேதநமும், அசேதநமுமான ஸர்வ வஸ்துவும் ப்ரஹ்ம ஸ்வரூபமேயாதலின் இதிலுள்ள ஸர்வ தோஷமும் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கே என்னதாகும். வேதப்ரமாணத்தைக்கொண்டு ஒரு ஸித்தாந்தம் செய்த பிறகு இப்படி ஆக்ஷேபம் செய்வது தகுமோவெனில் இது ப்ரமாண வாக்யத்தை அநுஸரித்து வெறும் தர்க்கத்தைக்கொண்டு கேட்கும் கேள்வியன்று. முன்செய்த ஸித்தாந்தத்தை அப்படியே வைத்து ப்ரஹ்ம ஸ்வரூபம் இவ்விதமானது, இவ்விதமாக அது காரணம். இவ்விதமாக கார்யம் என்று மனதில் பதிய வைப்பதற்காகச் செய்யும் மனனம். இதையெல்லா முள்ளபடியே அறிந்து தெளிவு ஏற்பட்ட பிறகன்றோ ப்ரஹ்மத்தை உபாஸிக்க முடியும். இவ்விதம் ஸந்தேஹங்கள் இருக்கும்பொழுது தெளிவு உண்டாவது எப்படி? அன்றியும் இக்கேள்விகளுக்குப் பரிஹாரம் சொல்லாது சக்தி விசேஷத்தால் ப்ரஹ்மம் அவயவமில்லாமலே பலபொருளாகப் பரிணமிக்குமென்று அங்கீகரிப்பது யாதவ ப்ரகாச மதமாய் முடியுமேயன்றி நமது ஸித்தாந்தத்தை ஸ்தாபித்ததாக ஆகாது. 'அகண்டமான ஸத்தே ப்ரஹ்மம். அதுவே காரணம், அதுவே சக்தி விசேஷத்தால் சேதனமாயும், அசேதனமாயும், ஈச்வரனாயும். பரிணமிக்கிறது' என்பது யாதவப்ரகாசர் கொள்கை. இதை இந்த அதிகரணத்தில் ச்ருதப்ரகாசிகை கண்டித்திருக்கிறது. இவ்விடத்தில் ஸூத்ரகாரர் செய்த ஸித்தாந்தத்தை அப்படியே ஒப்புக்கொண்டு யாதவப்ரகாசர் செய்யும் தீர்மானத்தை நாம் ஏன் எதிர்க்கவேண்டுமென்பதைக் கவனிக்க வேண்டும்:—

'यादवमिश्रास्तु भोक्तृभोग्यनियन्तृष्वन्यतमांशे कृत्स्नपरिसमाप्तः

इतरांशद्वयासम्भव इति पूर्वपक्षं कृत्वा स्वतो निरवयवमपि सर्व-
शक्तियोगात् परिणामेन सावयवं बहु भवतीति सिद्धान्तयन्ति ।
तदयुक्तं एकस्य बीजस्य शक्तिमतः परिणामेन शाखापत्रपुष्पादि-
रूपेणेव प्रकृत्यादिरूपेण बहुभवने प्रकृतिपुरुषेश्वराणामनादित्व-
नित्यत्वश्रुतिविरोधस्यावर्जनीयत्वात् सद्द्रव्यमात्रानादितया तेषा-
मनादित्वे शाखापत्रपुष्पादीनामपि तथाऽनादित्वात् तैरविशेष-
प्रसङ्गः । परिणामानपेक्षा नाद्यंशभेदे स्वतो निरवयवत्वं न स्यात् ।
निरवयवत्वश्रुतिरीश्वरांशाविषयेति चेत्, तर्हि जगदुपादानस्य
ब्रह्मणः कृत्स्नप्रसक्तिनिरवयवत्वविरोधो परिहृतः स्यात् । निरंश-
स्योपादानत्वाभावात् ।

*என்று இவ்விடத்தில் ச்ருதப்ரகாசிகை 'அம்சபேதமில்லாத ப்ரஹ்மம் காரணம், அது தனது சக்தி விசேஷத்தால அவயவமுள்ள பல வஸ்துக்களாக மாறுகிறது என்பது யுக்தமல்ல. கார்யமாய் இருக்கும்போதுள்ள ப்ரக்ருதி, புருஷன், ஈச்வரன், என்ற பேதம் காரணதசையில் உண்டா? இல்லையா? உண்டெனில் காரணப்ரஹ்மம் நிரவயவமென்பது போகும். இல்லையெனில் முன்னில்லாமல் புதிதாகவே ப்ருக்ருதி, புருஷன், ஈச்வரன் இவர்கள் உண்டாகிறார்கள் என்றதாகும். அப்பொழுது இவர்களுக்கு நித்யத்வம சொல்லுகிற ச்ருதிவிரோதம் வருமென்று இவ் வியாக்யான க்ரந்தத்தின் கருத்து. நிரவயவமாய் இருந்த ப்ரஹ்மம் பிறகு ஸாவயவமாகவும் ஆகும். இப்படிப் புதிதாக ஸாவயவப் பொருளாக மாறினாலும் அநாதியாகவுமிருக்கும். ஆதியுள்ளதாயிருக்க அநாதி எப்படியெனில்—அது ஸர்வசக்தியாயிருக்கையாலே சாஸ்த்ரம் சொன்னதை அப்படியே ஒப்புக்கொள்ளவேணும் என்ற இந்த ரீதியில் ஒரு ஸித்தாந்தம் செய்வதானால் இந்த ச்ருதப்ரகாசிகா க்ரந்தம் சேராது.*

இன்னும் மூன்று மூன்று நாலில் ஸூத்ரகாரரே 'ப்ரிய ப்ரியமேவ ஶிர:' என்று துடங்கிப்ரஹ்மத்திற்குச் சொல்லப்பட்ட ப்ரியசிரஸ்த்வாதி குணங்கள் ஸத்யக்ஞானாதிகள்போல் வாஸ்தவ குணங்களல்ல. அவைகளை ஒப்புக்கொண்டால் ப்ரஹ்மத்திற்கு சிரஸ் சிறுத்தது உடல் பெருத்தது என்றிப்படி சிறுமை, பெருமையெல்லாம் வரும். அப்பொழுது அது ஸ்தூலமன்று, அணுவன்று என்றது விரோதிக்கும் என்கிறார். ச்ருதியில் சொன்னதெல்லாம் அப்படியே அங்கீகரிக்கப்பட வேண்டுமானால் ஸர்வ சக்தியுள்ள ப்ரஹ்மம் ஸ்தூலமல்லாததாகவும், அணுவல்லாததாகவும் இருக்கலாம். ப்ரிய சிரஸ்த்வாதி குணங்களுள்ளதாகவுமிருக்கலா மென்றிப்படியே கொள்வது உசிதமாயிருக்க இவை வாஸ்தவ குணங்களல்லவென்று ஸூத்ரகாரர் ஸித்தாந்தம் செய்தது யுக்தமன்றென வரும். இப்படி இன்னும் பல விரோதங்களைக் காட்டலாம்.

## 3
## (தர்க்கம்.)

இத்தகைய ஸங்கட நிலை வாராமைக்காக முக்யமாகக் கவனிக்கவேண்டிய விஷயம் இது—

ப்ரத்யக்ஷத்தாலும், அனுமானத்தாலும் அறியக்கூடாத விஷயத்தையே அறிவிப்பதற்காக ஏற்பட்ட வேதமெனும் சப்த ப்ரமாணம் ப்ரத்யக்ஷத்தாலும் அனுமானத்தாலும் ஒன்றுக்கொன்று விருத்தமென்று நிச்சயிக்கப்பட்ட வஸ்துக்களின் தன்மையை மாற்றி வேறு ஒருவிதமான நிச்சயத்தை உண்டாக்கும் பொறுப்பை ஏற்காது. இந்த விஷயம் அதற்கு நிலமன்று. ப்ரத்யக்ஷத்திற்கும், சப்த ப்ரமாணத்திற்கும் விரோதமேற்பட்டால், ப்ரத்யக்ஷமே பல

முள்ளது. ஸர்வ ஜகத்திற்கும் காரணமான ஒரு ப்ரஹ்மம் உண்டென்பது ப்ரத்யக்ஷானுமானங்களால் அறியவியலாது. இதை சப்தமே அறிவிக்கும். ஆனால் இந்த ப்ரஹ்மம் ஸத்ய மாயும், க்ஞானானந்த ஸ்வரூபமாயும், ஸர்வகனுமாயும், ஸத்ய ஸங்கல்பமாயும் இருக்குமென்று சில வாக்கியங்களும் நிர்குண மென்று மற்றுஞ்சில வாக்கியங்களும் சொல்லும்பொழுது அது ஸத்யத்வாதி குணங்களுள்ளதாகவுமிருக்கும் குணமில் லாததாயுமிருக்குமென்று கொள்ளவியலாது. குணமுடை மையும், குணமில்லாமையும் ஒரே வஸ்துவில் நாம் கண்ட தில்லை. எது எப்பொழுது எவ்விடத்திலிருக்கிறதோ, அதுவே அப்பொழுது அவ்விடத்திலில்லை என்பது விருத்தம். இதை 'भावाभावयोर्विरोधः' என்பார்கள். இது நாம் ப்ரத்ய க்ஷத்தால் தீர்மானித்த விஷயம். இதை மறுத்து உபதேசஞ் செய்வதில் சப்த ப்ரமாணத்திற்கு நோக்குண்டென்பதற்கு ஒரு ப்ரமாணமாவது யுக்தியாவது கிடையாது. ஆகையால் நிர்குணமாகில் க்ஞானானந்தாதி குணம் கூடாது. இக்குணங்களுடையதாகில் நிர்குணத்வம் கூடாதென்று விரோதம் தோற்றும்பொழுதெல்லாம் வல்ல ஜனத்திற்கு இரண்டும் கூடுமென்று பதிலுரைக்காமல் ஸத்யம், க்ஞான மித்யாதி வாக்யங்கள் இக்கல்யாண குணங்களின் உண்மை யையும், நிர்குண வாக்கியங்கள் துர்குணங்களின் இன்மை யையும் உபதேசிக்கின்றனவாதலால் விரோதமில்லை யென்றி ப்படி வ்யவஸ்தை செய்தார்கள். ஸ்தூலமன்று, அணுவன்று பரிச்சின்னமன்று என்றிப்படி ப்ரஹ்மத்தின் ஸ்வரூபத்தை பல வாக்கியங்களுணர்த்துவதால் ப்ரியசிரஸ்த்வாதிகள் ஜன ஸ்வ ரூபம் மனதில் படிவதற்காக ஏறிட்டுக் கூறிய குணங்களே யன்றி, உண்மையானவை யன்றென்று தீர்மானித்தார்கள். ஆகவே வேதவாக்யத்தைக்கொண்டு அதன் அர்த்தத்தை

அறியும்பொழுது மற்ற வேதவாக்யங்களுக்கும், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் தீர்மானித்த வ்யவஸ்தைகளுக்கும் விரோதமில்லாமல் நிஷ்கர்ஷம் செய்யவேணும்.

ஈச்வரன் ஸ்வதந்த்ரனுகையாலே முக்தனானவனுக்கும், அவன் ஸங்கல்பத்தால் மறுபடியும் ஸம்ஸாரபந்தம் வருமோ என்ற ஸந்தேஹம்வர, ஸூத்ரகாரர் **'अनावृत्तिः शब्दात्'** புநராவ்ருத்தி கிடையாது என்று வேதம் சொல்லுகையாலே மறுபடியும பந்தம் உண்டாகாதென்றுர். இதனுல் ஸந்தேஹத்திற்கு என்ன பரிஹாரம் என்பதை நாம் பராமர்சிக்கவேணும். வேதம் சொன்ன அபுநராவ்ருத்தியை ஒப்புக் கொள்ளுகிறோம். ஆனுலும் அது எப்படி? ஸ்வதந்த்ரனுயும், ஸத்ய ஸங்கல்பனுயுமிருக்கிற ஸர்வேச்வரன் மறுபடியும் இவ்வாத்மாவிற்கு பந்தம் ஏற்படட்டுமென்று ஏன் ஸங்கல்பிக்கக் கூடாது? அப்படி ஸங்கல்பித்தால் ஏன் பந்தம ஏற்படாது? அப்படியிருக்க புநராவ்ருத்தியில்லை என்பது எப்படி யுக்தமாகும்? என்று சங்கை உண்டாவதில் தடையொன்றுமில்லை. இதற்குப் பரிஹாரம் செய்யாமல் இப்படி சங்கிப்பது கூடாதென்பது வேதாந்தமீமாம்ஸா சாஸ்த்ரத்தை உபதேசிக்கப் புகுந்தவாசிரியர்களுக்கழகன்று. **ब्रह्म** இருக்கிறதோ இல்லையோ, யக்ஞம் செய்தால் **फलम्** வருமோ வரர்தோ என்றிவ்வித சங்கைகள் பிறந்தால், அப்பொழுது **'शास्त्रस्यानतिशङ्क्य-त्वात्'** என்றும் **'श्रद्धत्स्व सोम्य'** என்றும் சிக்ஷிப்பார்கள். மற்ற விடங்களில் தகுந்த **उपपत्ति**யையே காட்டுவார்கள். இதெல்லாம் பராமர்சித்து நம்மிராமாநுசன் அநாவ்ருத்தி ஸூத்ரத்தை விவரிக்கும்பொழுது **'शब्दश्च'** என்று தொடங்கி ப்ரமாண வாக்கியத்தை உதாஹரித்துப் பிறகு **'न चोदितत्व मकर्मवश्यस्य'** என்றுரம்பித்து முக்தன் க்ஞான விகாஸ முண்

டாகி இதற்குமேல் ஒன்றுமில்லை யென்னும்படியான ब्रह्मा நந்தத்தை அனுபவிக்கிருனையால் மற்றொரு அபேக்ஷை உண்டாகாது. ஆகவே இவன் இச்சைப்படுவதற்காக ஸர்வே ச்வரன் இவனுக்கு மறுபடியும் ஸம்ஸாரத்தைக் கொடான். க்ஞானீ தனக்கே ஆத்மா என்று போற்றி அவனை மிக ப்ரிய ஞக ஸர்வேச்வரன் கொண்டாடுகிருனையால் தாஞகவும் அப்படி ஸங்கல்பிக்கமாட்டான். ஆகையால் புனரா வ்ருத்தி சங்கிக்க வொண்ணுதென்று நிரூபித்தார். இதைக் கணி சித்தே 'ஈசுவரன் ஸத்ய ஸங்கல்பனுகையாலே புனரா வ்ருத் தியுங் கூடுமே என்னில் 'प्रियो हि ज्ञानिनोऽत्यर्थं' 'स महात्मा सुदुर्लभः' என்றிருக்கிற வீச்வரன் இவனை ஸம்ஸரிப்பிக்கக் கூடாமையாலும் ஸம்ஸாரஹேதுவான கர்மம் நிச்சேஷமாக நிவ்ருத்தமானமையாலும் 'न च पुनरावर्तते इमं मानवमावर्तं नावर्तन्ते, 'मामुपेत्य पुनर्जन्म दुःखालयमशाश्वतम् । नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः । मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते' என்கையாலே புனராவ்ருத்தி ப்ரஸங்கமே இல்லை' என்று ஹேது பூர்வமாகவே ச்ருதிஸ்ம்ருதிகள் தத்வ சேகரத் தில் உதாஹரிக்கப்பட்டன. இதையுமிங்கே ஆலோசிக்க வேணும்.

## 5

## चेतनाचेतनशक्ति । (சேதஞசேதனசக்தி)

ஆக இப்படி ப்ரத்யக்ஷாதி சப்தம் இந்த ப்ரமாணங்களுக் கும், அவைகளுக்கு உதவியாயிருக்கும் தர்க்கத்திற்கும் உள்ள விஷய வ்யவஸ்தைகளை அறிந்தோம். இனி ப்ரக்ருத விஷயத் தைக் கவனிக்கவேண்டும். அதாவது நிரவயவமான ब्रह्मம் பலவாக மாறுவதெப்படி? உலகத்தில் ஒரு லோஹத்தை அல் லது மண்பாரத்தைக்கொண்டு பல வஸ்துக்களையும், பாத்தி

ரங்களையும் செய்யக் காண்கிறோம். அந்த லோஹத்திற்கும், மண்பாத்திரத்திற்கும் அவயங்களிருக்கின்றன. இப்படி அவயவங்களில்லாத ஒரு வஸ்து, பல வஸ்துக்களாக ஆவதை நாம் கண்டதில்லை. ஆகையால் எவ்விதத்திலும் நிரவயவமான ஒரு வஸ்து, பல வஸ்துக்களாக மாறமுடியாது என்பது ப்ரத்யக்ஷத்தால் நிச்சயிக்கப்பட்ட ஒரு நியமம். இதற்கு ஸர்வ வல்லமையுள்ள ப்ரஹ்மம் இப்படியாகலாம் என்றதால் என்ன ஸமாதானம் கூறினதாயிற்று? ப்ரஹ்மம் ஆதியில்லாதது, அந்தமில்லாதது, விகாரமில்லாதது, எங்கும் நிறைந்தது என்றிப்படிப் பல வேதவாக்யங்களால் அறிவிக்கப்பட்ட தன்மைகளுக்கு ஒரு விரோதமுமில்லாமல் இங்கு ஸமாதானம் சொல்ல வேண்டும். அப்படி நம்பூர்வர்கள் சொல்லியிருக்கின்றனர்—எங்ஙனேயென்னில்—'சேதநவஸ்துக்கள் எல்லாம் ப்ரஹ்மத்தின் ஒரு சக்தி, அசேதநவஸ்து மற்றொரு சக்தி. இவைகளைத் தனது ஸங்கல்பப்படி நடத்துவதற்கேற்ற ஸாமர்த்யமுடைமை; மற்றொரு சக்தி. இவ்வித பல சக்திகள்வாய்ந்த ப்ரஹ்மம் தனது தனி ஸ்வரூபத்தில் நிரவயவமேயாகிலும் தனக்கு ப்ரகாரமாய் உடம்பாய் நிற்கும், பலசேதந வஸ்துக்களையும் அசேதன வஸ்துவையும் ஸ்தூல ரூபமுள்ள பல உருவங்களாக மாற்றித் தானும் அவைகளுக்குள் ஆத்மாவாய் இருந்து தானே எல்லாப் பொருள்களுமென்னும்படி நிற்கிறது. இப்படி ஸ்வரூபத்தில் நிரவயவமாய் தனதுடம்பான சேதநாசேதந வஸ்துக்களை த்வாரமாக்கிப் பல பொருளாகின்றது என்று கொள்ளப்படுவதால் விரோதமொன்றுமில்லை' என்று.

இது 'प्रकृतिशरीरकं ब्रह्म वास्तवप्रपञ्चकारणमित्यभ्युपगमो वरम् सकलप्रमाणन्यायानुपरोधित्वात् । ननु प्रकृतिविशिष्टस्य कारणत्वे विशेष्यांशस्यापि सावयवत्वं त्वन्मतेऽपि स्यात् नैवम्

**विशिष्टताङ्गीकारे विशेषणविशेष्ययोः स्वभावव्यवस्थादर्शनात् । शरीरविशिष्टस्य प्रवृत्तिहेतुत्वेऽपि शरीरात्मनोः स्वभावव्यवस्था हि दृश्यते विशिष्टस्य कारणत्वमेव ह्यभ्युपगतम् । न तु सावयवत्वम् । तत्तु विशेषणांशस्यैव । अतो न कश्चिद्दोषः ।**

என்கிற ச்ருதப்ரகாசிகா க்ரந்தத்தால் ஸ்பஷ்டம். இப்படி விசேஷணமான ப்ரக்ருதி பல கார்ய வஸ்துக்களாகப் பரிணமிக்கிறதென்று கார்யகாரண **भा**வத்தை நிர்வஹித்தாலும், விசேஷ்யமான **अखण्डब्रह्म** ஸ்வரூபம் ஒவ்வொரு கார்யவஸ்துவிலுமிருந்து தான் கார்யமாகும்போது, ஒரு கார்ய வஸ்துவில் அது பூர்ணமாக விருக்குமாகில் மற்ற வஸ்துக்களில் அது இல்லை என்று வரும். ஒவ்வொரு வஸ்துவிலும் அதன் அம்சம் மாத்திரம் இருக்கிறதென்னில் அது நிரவயவம், **अखण्ड**ம் என்பது சேராது என்றிப்படி வரும் சங்கைக்குப் பரிஹாரம்சொல்லவேணும். இவ்விடத்தில்உற்று நோக்கவேண்டிய விஷயமாவது **सूक्ष्मचिदचिद्विशिष्टब्रह्म**ம் **स्थूलचिदचिद्विशिष्ट**மாய் கார்யமாகிறது. காரணாவஸ்தையில் விசேஷணமான சித்தும், அசித்தும் ஸூக்ஷ்மமாய் இருக்கும் இவ்விரண்டுமே கார்யாவஸ்தையில் ஸ்தூலமாகிறது. அப்பொழுது அசித்தின் ஸ்வரூபமே மாறுகிறது. சித்தின் ஸ்வரூபத்திற்கு அப்படி மாறுதலில்லை. அதன் **धर्मभूत**க்ஞானத்திற்கே **संकोचविकास** ரூபமான மாறுதல் உண்டு. இதுவும் விசேஷ்யமான **ब्रह्म**த்திற்கு இல்லை. காரணாவஸ்தையில் அதன் ஸ்வரூபமும் க்ஞானமும் எப்படி அநந்தமாயும் ஸங்கோசமில்லாததாயும் இருந்ததோ அப்படியே கார்யாவஸ்தையிலுமிருக்கும். முன் **सूक्ष्मचिदचिद्विशिष्ट**த்வமிருந்தது, பிறகு **स्थूलचिदचिद्विशिष्ट**த்வம் ஏற்படுகிறது. ஆக **चिदचित्**துக்களின் மாறுதலால் வரும் விசேஷம் தவிர மற்றொரு விசேஷ

மும் ப்ரஹ்மத்திற்குக் கார்யாவஸ்தையில் இல்லை யென்றதா யிற்று. ப்ரஹ்மம் கார்யமாகையாவது—கார்யவஸ்துக்களின் அந்தர்யாமியாய் இருக்கை. இவைகளின் கார்யாவஸ்தையை த்வாரமாக வைத்தல்லது ப்ரஹ்மத்திற்கு அதன் ஸ்வரூபத்தை யேகொண்டு கார்யத்வமில்லை. இதனால்

'तथाऽपि शरीरिणश्चापि कार्यत्वाभ्युपगमात् उक्तदोषो दुर्वारः'
என்று ஸ்ரீ பாஷ்யத்திலும்

'यद्यपीति-एकशरीरे शरीरिणः परिसमाप्त इति नान्यत्र स्यादित्यर्थः'
என்று ச்ருதப்ரகாசிகையிலும் பூர்வபக்ஷத்தில் சொன்ன ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் செய்ததாகும். விசேஷ்யாம் சமான ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்குக் கார்யத்வம் ஸாக்ஷாத் அங்கீகரி தாலன்றோ அது ஒரு சரீரத்திலேயே முடிந்துவிடுமாகையால் மற்றொரு சரீரத்தில் இல்லாதொழியுமென்று ப்ரஸங்கிக்கும். அது காரணாவஸ்தையில் போலவே ஒரேவிதமாய் அநந்த மாய் இருந்துகொண்டு காரியங்களான விசேஷணவஸ்துக்க ளின் ஆத்மாவாகவிருந்து கார்யமெனப்படுகிறது.அப்பொழுது ஒரு சரீரத்தில் அதற்கு परिसमाप्ति அதாவது முடிவு ஏது? இவ்வாறு விசேஷணத்வாராதான் பல பொருளாக ப்ரஹ்மம் பரிணமிக்கிறதென்பதாலேயே இந்த சங்கைக்குப் பரிகாரம் கிடைத்துவிடுகிறதென்பதைக் கருதியே ஸித்தாந்தத்தில் ஸ்ரீ பாஷ்யத்திலும் ச்ருதப்ரகாசிகையிலும் தனியே இதற்குப் பரிஹாரம் செய்யவில்லை. இதற்கு மேலும் இங்கே ஒரு சங்கை உண்டு.

## 6

## पूर्णत्वम् (பூர்ணத்வம்)

அதாவது கார்யவஸ்துவில் ஒவ்வொன்றிலும் ப்ரஹ்மம் ஆத் மாவாய் அந்தர்யாமியாய் நிற்கிறதென்று ஸித்தாந்தம். ப்ரஹ்ம

ஸ்வரூபம் அநந்தம். பரிச்சேதமேயில்லாதது. எங்கும் நிறைந்தது. கார்ய வஸ்துவெல்லாம் அதைக்காட்டிலும் மிகச்சிறியது. ஒரு சிறிய கார்யவஸ்துவில் அபரிச்சின்னமான ப்ரஹ்மம் ஆத்மாவாய் நிற்கிறதென்றால் பூர்ணமாக அதாவது அதன் முழு ஸ்வரூபமும் அதில் அடங்கி இருக்க முடியாது. அதன் ஒரு ஏகதேசமே அந்தக்கார்ய வஸ்துவில் ஸம்பந்தப்பட்டிருக்கும். அப்படியாகில் ஒவ்வொரு வஸ்துவிலும் ப்ரஹ்மம் பூர்ணமாக இருக்கிறதென்ற ப்ரமாணத்திற்கும், இதுவும் ப்ரஹ்மம் அதுவும் ப்ரஹ்மம் என்ற வ்யவஹாரத்திற்கும் விரோதம் வரும். ஒரு வஸ்துவிலும் அது பூர்ணமாக விருக்காதபோது பூர்ணமென்பது சேராதன்றோ. ஒரே ப்ரஹ்மம் இதிலும் பூர்ணமாயிருக்கிறது, அதிலும் பூர்ணமாயிருக்கிறது என்பது எப்படி ஸாத்யமாகும்? என்று.

இந்த சங்கைக்கும் ஸமாதானமிங்கே ஸூத்ரகாரர் கருத்திலுள்ளது. அதை श्री भगवद्रामानुजன் நிபக்ரந்தத்தில் ஸ்பஷ்டமாக ஸாதித்தார்.

'यथा जातिवादिनो जातिरेकैवामूर्ताखण्डमुण्डादिष्वत्यन्तविलक्षणेषु अनन्तेष्वपि परिसमाप्यैव वर्तते । न तत्रेतरवस्तु चोद्यमिति । என்று.

## 7 ஜாதி

'கோ, அச்வம், கடம், படம் என்ற வஸ்துக்களில் தனித்தனியே 'கோத்வம், அச்வத்வம், கடத்வம், படத்வம்,' என்று நித்யமாய் நிரவயவமாய் ஜாதி ஒன்றிருக்கிறதென்று நையாயிகர் மீமாம்ஸகர் முதலானோர் சொல்வர். அவர்கள் அந்த விஷயத்தில் என்ன ஸித்தாந்தம் செய்கிறார்களோ அதுவே இங்கும் என்று ஸ்ரீபாஷ்யகாரர் திருவுள்ளம். ஜாதி

வாதத்தை அங்கீகரிக்காதவர்கள் 'ஒரு வ்யக்தியில் ஜாதி க்ருத்ஸ்நமாய் அதாவது பூர்ணமாயிருக்கிறதோ, அல்லது இந்த வ்யக்தியில் கொஞ்சம், அந்த வ்யக்தியில் கொஞ்சம் என்றிப் படி வ்யக்திதோறும் கொஞ்சம் கொஞ்சமாய் இருக்கிறதோ' என்று விகல்பித்து, முதல் பக்ஷம் ஸரியன்று. ஒன்றான ஜாதி ஒரு வ்யக்தியில் பூர்ணமாகவிருந்தால் மற்ற வ்யக்தி களில் இருக்க முடியாதாதலின்; இரண்டாவது பக்ஷமும் ஸரி யன்று. 'ஜாதிக்கு அவயவங்களில்லாமையால், ஒரு வ்யக்தி யில் ஒரு பாகமிருக்கிறது. மற்றொரு வ்யக்தியில் இன்னு மொரு பாகமிருக்கிறதென்று கொள்வது கூடாதாதலின்' என்றிப்படிக் கண்டனம் செய்தார்கள்.

## ஜயந்தபட்டன்

இதற்குப் பரிஹாரம் செய்யப்புகுந்து சுமார் ஆயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்த ஜயந்தபட்டன் தனது ந்யாய மஞ்சரியில்—

**यदप्युक्तं वृत्त्यनुपपत्तेरिति तत्राप्युच्यते प्रतिपिण्डं कार्त्स्न्येनैव जातिर्वर्तते । पिण्डान्तरे तदुपलम्भो न स्यादिति चेत् किं कुर्मः, कमुपलभामहे । पिण्डान्तरेऽपि तदुपलम्भोऽस्त्येव कथं च भवन्तमेनं निह्नुमहे ? एकदेशास्तु जातेर्न सन्त्येव यैरस्यावर्तेत भ्रमः । क्वेदमन्यत्र चेत् अहो निपुणता तव दृष्टान्तं याचसे यस्त्वं प्रत्यनुमानवत् ।**

என்றான். '**कार्त्स्न्येन वा, अवयवशो वा**' என்ற விகல்பத்தில் இரண்டாவது பக்ஷத்தைவிட்டு முதல் பக்ஷமே அதாவது ஒவ் வொரு வ்யக்தியிலும் '**कार्त्स्न्येन वर्तते**' என்ற பக்ஷமே ஸம்ம தம் என்று ப்ரதிக்ஞை பண்ணி அப்படியானால் மற்ற வ்யக் திகளில் அது இல்லை என்று வருமென்ற ஆக்ஷேபத்திற்கு

என்ன செய்கிறது, யாரை நிந்திக்கிறது? மற்ற வ்யக்திகளி லும் அது தெரிகிறதே. அது தெரியும்பொழுது இல்லை என்று எப்படிச்சொல்வது? ஜாதிக்கு அவயவங்கள் இருந்தா லல்லவோ ஏகதேச சந்தான் ஒரு வ்யக்தியில் இருக்கிறதென்ன லாம் என்றிங்கே பதில் சொல்லப்படுகிறது. அவயவமில்லா மையால் இரண்டாவது பக்ஷத்தை நாம் அங்கீகரிக்கவில்லை. முதல் பக்ஷத்தில் நீ சொல்லும் தோஷம் வாராது. ப்ரத் யக்ஷமாய் மற்ற வ்யக்திகளிலும் ஜாதி காணப்பெறுமாதலின் என்பது பதில். மற்ற வ்யக்திகளிலும் இருக்கிறதென்று அங்கீகரித்தவர், ஒரு வ்யக்தியிலேயே कार्त्स्न्येन இருக்கிற தென்பதை எப்படி நிர்வஹிப்பது? कार्त्स्न्येन இருக்கிற தென்றால் மற்றவிடத்தில் இல்லாமல் இங்கேயிருப்பது என் றன்றோ பொருள் எனில் மற்ற வ்யக்திகளிலும் இருத்தல் ப்ரத்யக்ஷமாகத் தெரிவதால் அதற்கு விரோத மில்லாமல் कार्त्स्न्येन இருத்தல் என்பதைப் பரிஷ்கரித்துக் கொள்ள வேணுமென்று ஜயந்தபட்டனின் கருத்து. நிரவயமாயும் ஒன்றாயுமுள்ள ஜாதி ஒவ்வொரு வ்யக்தியிலும் பரிபூர்ண மாக இருக்கிறதென்பதை மனதில் வாங்கிக்கொள்ளமாட் டாமல்பூர்வ பக்ஷி இப்படி ஒரு இருப்பு வேறொரு வஸ்து விற்கும் கண்டதுண்டோ வென்று கேட்டதாக வைத்து அதற்குப் பரிஹாஸமாகப் பதில் சொல்லுகிறான் क्वेदमन्यत्र இத்யாதியால். இது வாக்யம் போல் அச்சிடப்பட்டிருந் தாலும் திருத்தி ச்லோகமாகப் படிக்கவேணும்.

क्वेदमन्यत्र (दृष्टं) चेदहो ! निपुणता तव ।
दृष्टान्तं याचसे यस्त्वं प्रत्य(क्षे़ऽप्य)नुमानवत् ॥

என்று. ப்ரத்யக்ஷத்தால் ஒரு வஸ்துவின் தத்துவத்தை நிச்ச யிக்கும்பொழுது, மற்றொரு வஸ்து அவ்விதமாக இருந்த

லென்ன, இல்லாவிட்டாலென்ன? அநுமானத்தால் நிச்சயிக்கும் பொழுதன்றோ दृष्टान्तं வேண்டுவது என்று கருத்து.

### பார்த்தஸாரதி மிச்ரர்.

*ப்ராயேண ஆயிரம் வருஷங்களுக்குமுன் இருந்த பார்த்தஸாரதி மிச்ரர் என்ற மீமாம்ஸகரும் ஜாதி ஒவ்வொரு வ்யக்தியிலும் எப்படி இருக்கிறதென்பது பற்றி தனது சாஸ்த்ர தீபிகா க்ரந்தத்தில் நிரூபணம் செய்திருக்கிறார்.*

**यत्तु कार्त्स्न्येन वा अवयवशो वा वृत्तिरिति विकल्पितं, तदप्य-युक्तम् । भेदापेक्षं हि कार्त्स्न्यम् । न च सामान्यस्य स्वरूपतो वा अवयवतो वा भेदोऽस्ति । एकत्वादनवयवत्वाच्च । निरवयव-त्वादेवावयवशोऽपि वृत्तिरसंभाव्यैव । तस्माद्व्यक्तिषु जातिर्व-र्तत इत्येतावदेवात्र वक्तुं शक्यते । प्रमाणतोऽवगमात् न कार्त्स्न्य-भागविभागः । प्रमाणाभावादसंभवाच्च । तथाऽवयविनोऽप्यव-यवेषु न कार्त्स्न्यं संभवति । बहुत्वाभावात् । तदपेक्षत्वाच्च कृत्स्न-त्वव्यवहारस्य अवयवशो वृत्तिरप्ययुक्तैव । किमिदानीमेकरूपैव सामान्यस्य व्यक्तिष्ववयवेषु चावयविनो वृत्तिः । नेत्युच्यते सामान्यं प्रत्येकं वर्तते । अवयवी तु व्यासज्येत्येव विशेषः व्यक्त्यन्तरमनपेक्ष्यैव व्यक्त्यन्तरे वर्तमाना स्वानुरूपां बुद्धिं जन-यन्ती जातिः प्रत्येकं वर्तत इत्युच्यते । न तु कार्त्स्न्येन वृत्तिः । अवयवी तु अवयवान्तराण्यपेक्ष्यावयवान्तरे वर्तमानः स्वाकारां बुद्धिं जनयन् व्यासज्य वर्तते इति व्यपदिश्यते । न ह्येकस्यामेव व्यक्तौ गोबुद्धिवदेकस्मिन्नेव तन्तौ पटबुद्धिरुत्पद्यते—**

என்பது அவர் க்ரந்தம். ஜாதி வ்யக்தியில் எப்படி இருக்கிறது? முழுவதுமா (कार्त्स्न्येन वा) அல்லது ஏகதேசத்திலா என்பது கேள்வி. இரண்டு விதமுமல்ல என்பது இவருடைய பதில். இந்த விகல்பம் பல அவயவங்களால் ஆக்கப்பட்ட

வஸ்து விஷயத்தில் தான் பொருந்தும். 'कार्त्स्न्येन' என்றால் எல்லா அவயவங்களாலும் என்று பொருள் ஏகதேசத்தினால் என்றால் சில அவயவங்களால் என்று. அவயவமே இல்லாத ஒரு வஸ்துவைப்பற்றி இது எல்லா அவயவங்களுடனும் இருக்கிறதா, சில அவயவங்களுடனேயா என்பது உசித மில்லை என்பது ஸ்பஷ்டம். ஆகையால் இந்த இரண்டு விதத் திற்குள் ஒருவிதமாய் அது இருக்கிறது என்ற நிர்ப்பந்தமில் லாமல் 'இருக்கிறது' என்று மாத்திரம் சொல்லவேண்டு மென்பது இவர் கருத்து.

कार्त्स्न्येन வ்ருத்தியென்றால் இங்கே மாத்திரம் இருப்பது என்று அர்த்தம் என்று வைத்து வேறிடத்தில் இல்லாமல் போகும் என்று பூர்வபக்ஷி சொன்னான். நாங்கள் அந்த அர்த்தம் கொள்ளவில்லை. வேறு இடத்திலும் இருக்கிறது என்று அங்கீகரித்தே कार्त्स्न्येन वर्तते என்று சொல்லுகிறோம்.

இப்படி ஒரு வ்ருத்தியுண்டா என்றால் ப்ரத்யக்ஷத்தினால் உண்டு என்று ஸித்திக்கும்போது இதில் ஸந்தேஹமென்ன என்று ஜயந்தபட்டன் சொன்னான். कार्त्स्न्येन என்பதன் முக்யார்த்தம் भेदगर्भम्. அது இங்கு ஸம்பவிக்காதாகையால் कार्त्स्न्येन वर्तते என்றும் நாம் சொல்லுவது கூடாது. அவயவ மில்லாவிடத்தில் कृत्स्न சப்தம் ப்ரமாண க்ரந்தத்தில் காணப் பட்டால் அதற்கு கௌணார்த்தம் சொல்லி நிர்வஹிக்க வேணும். ப்ரக்ருதத்தில் நாம் நிர்வஹித்து ப்ரயோகிக்க வேண்டிய நிர்ப்பந்தமில்லை என்பது பார்த்தஸாரதிமிச்ரர் கரு த்து. ஆனாலும் ஜாதி வ்யக்தியில் எப்படித்தானிருக்கிறது? என்பதை புத்தியில் வாங்கிக்கொள்வதற்காக அவயவியை எடுத்து அதன் வ்ருத்தியை நிரூபித்தார். அவயவி அவயவங் களில் இருக்கிறது. அதன் வ்ருத்திக்கு வ்யாஸஜ்யவ்ருத்தி

என்று பெயர். அதாவது எல்லா அவயவங்களும் சேர்ந்தே அவயவியைத் தாங்குகின்றன. அடுப்புக்காக மூன்று கற்களை வைத்து அதன்மேல் பாத்திரத்தை வைத்தால் அந்தக் கற்கள் அந்த பாத்திரத்தைத் தனித் தனியே தாங்குகிறதில்லை. மூன்றும் சேர்ந்து தாங்குகின்றன, இப்படி ஒன்றுக்கொன்று அபேக்ஷித்துத்தாங்கும் கற்களின்மேல் பாத்திரத்தின் இருப்பு, அதாவது வ்ருத்தி வ்யாஸஜ்யவ்ருத்தி எனப்படும். அவயவிக்கு அவயவங்களிலுள்ளது இவ்வித வ்யாஸஜ்யவிருத்தியே. அப்படியன்று ஜாதி வ்யக்தியிலிருப்பது. எல்லா வ்யக்திகளும் சேர்ந்து ஜாதிக்கு ஆதாரமாக இருப்பனவல்ல. பின் ஒவ்வொரு வ்யக்தியும் தனித் தனியே ஜாதிக்கு ஆதாரம். ஜாதி தனித்தனியான ஒவ்வொரு வ்யக்தியிலும் இருக்கிறது. இது ப்ரத்யேக வ்ருத்தி எனப்படும். இவ்விடத்தில் ஒரு விஷயம்-

கடம், படம், முதலிய வஸ்துக்களில் ரூபம் என்னும் குணம் தனித்தனியே ஒவ்வொன்றிலும் இருக்கிறது. ஒவ்வொரு வஸ்துவும் தனித்தனியே தனது ரூபத்திற்கு ஆதாரம். ரூபத்திற்கு அவயவங்களில்லை. ஆகையால் அது தன் ஆதாரமான வஸ்துவில் **कार्त्स्न्येन** இருக்கிறதா? ஏகதேசத்திலிருக்கிறதா? என்று ஒருவன் கேட்பானாகில் நிரவயமான ரூபத்தின் விஷயத்தில் இப்படி ப்ரச்னம் பண்ணுவது உபபந்நமன்று என்று பார்த்தசாரதி மிச்ரர் மதத்தை அனுஸரித்துப் பதில் சொல்லவேணும். இப்படியிருக்க இந்த ரூபம்போன்ற குணத்தை எடுத்து இதுபோலவே ஜாதி விஷயத்திலும் முழுவதும் (**कार्त्स्न्येन**) இருக்கிறதா? ஏகதேசத்திலிருக்கிறதா? என்ற கேள்வி கூடாதென்று சொல்லலாம். அதை விட்டு அவயவியை எடுத்து அம்மாதிரிப் பதில் சொல்லிப் பிறகு 'ஆனாலும் ஜாதி வ்யக்தியில் இருப்பது அவயவி அவ

யவங்களில் இருப்பது போன்றன்று' என்று ஒரு விசேஷத்தையும் பார்த்தசாரதிமிச்ரர் கூறினார். இங்கு அவர் கருத்தாவது—ஒரு கடத்தில் அதன் ரூபம் இருக்கிறது. இன்னொரு கடத்தில் அதன் ரூபம் இருக்கிறது. ஆனால் இந்த ரூபம்வேறு. அந்த ரூபம் வேறு. தனித்தனி ரூபம் தனித்தனி கடத்திலிருக்கிறது. ஆதாரமாகிய இந்த கடமும், அந்தகடமும் எப்படிவேறுபட்டதோ அப்படியே ஆதேயமான இந்த ரூபமும், அந்த ரூபமும் வேறுபட்டது. ஆகையால் ரூபம் முதலிய குணங்களை எடுத்துக்காட்டுவது பொருந்தாது. இந்த வ்யக்தியில் இருக்கும் ஜாதியும், மற்றொரு வியக்தியில் இருக்கும் ஜாதியும் ஒன்றேயன்றோ? உலகத்திலுள்ள வ்யக்திகளிலெல்லாம் இருக்கும் ஜாதி ஒன்றே. இதன் வ்ருத்தி எவ்விதமானது? என்பதை நிரூபிக்கவேண்டிய ஸமயத்தில் ரூபத்தைத் த்ருஷ்டாந்தமாக எடுப்பது, ரூபம் எப்படித் தனித்தனியாக ஒவ்வொரு வ்யக்தியிலும் இருக்கிறதோ அப்படியே ஜாதியும் இருக்கிறதென்றும், இப்படியாகில் ரூபம் போலவே ஒவ்வொரு வ்யக்தியிலும் ஜாதியும் வெவ்வேறாக வேண்டாமோ என்றும் பல விபரீத சங்கைகள் உதிக்க ஹேதுவாகுமாகையால் அதை உபேக்ஷித்து அவயவியை எடுத்தார். அவயவி ஒன்றே. அது எல்லா அவயவங்களிலும் பரவி இருக்கின்றது. ஒரு நூலை மாத்திரம் கணிசித்து இது வஸ்த்ரம் எனில் சேராது. மற்ற நூல்களைவிட்டு அந்த நூல் மாத்திரம் வஸ்திரத்திற்கு ஆதாரமன்று. ஆகையால் ஒரு நூல் வஸ்திரம் ஆகாது. அவயவிபோல் ஜாதி ஒன்றே. உலகத்திலுள்ள எல்லா வ்யக்திகளிலும் ஜாதி இருக்கின்றது. ஆனால் அவயவ அவயவங்களிலிருப்பதுபோல் விரவியிராமல் ஒவ்வொரு வ்யக்தியிலும் தனித்தனியே இருக்கிறது. கோத்வமுள்ள ஒவ்வொரு வ்யக்தியும் 'கோ' எனப்படும். **'सर्वसर्वगता वा स्यात् व्यक्तिसर्वगतापि वा'** என்று விகல்பித்து பௌத்தர்கள்

ஜாதியை ஸ்தாபித்தார்கள். இதற்குப்பதில் சொல்லபுகுந்த நையாயிக மீமாம்ஸகர்களுக்குள் பெரும்பான்மையோர் सर्वसर्वगता என்ற பக்ஷங்கொண்டார்கள். சிலர் व्यक्तिसर्वगता என்றபக்ஷமும் சேருமென்றனர். எல்லோரும் அவயவி மாதிரியே ஜாதி வ்யக்திகளில் ஒன்றாக இருக்கிறதென்பதை இசைந்தார்கள். இல்லாவிடில் ரூபம்போல் ஒவ்வொரு வ்யக்தியிலும் ஜாதி வேறுபட்டதாகும். ஆனால் இது ப்ரத்யேக வ்ருத்தி அவயவிபோல் வ்யாஸஜ்ய வ்ருத்தியன்று.

### சாலிகநாதன்.

இப்படிப் பார்த்தசாரதிமிச்ரர் ப்ரத்யேக வ்ருத்தி என்று சொல்வதையே சௌணமாக कृत्स्न வ்ருத்தி யென்று ஜயந்த பட்டர் கருதினார் என்பது உசிதம். இதைப் பார்த்தசாரதி மிச்ரருக்கும் ப்ராசீனராய் असम्प्रदायकारரால் கடாக்ஷிக்க பெற்ற 'ப்ரகரண பஞ்சிகா' என்றும் க்ரந்தத்தைச் செய்தவருமான சாலிகநாத ரென்பவர்

वृत्तिविकल्पे तु कृत्स्नसमाप्तिरेवाङ्गीकरणीया । न चान्यत्रावृत्ति-दोषः प्रत्यक्षावगमाद्वृत्तेः प्रत्यभिज्ञायाः स्थापितत्वात् पृथग्ग्रहणं तु जातेरसिद्धमेव । व्यक्त्यन्तरे हि जातिप्रतीयमाना प्राच्यपिण्ड-परिहारेण प्रकाशते । उदीच्यपरिहारस्तु प्राक्तनसमधिगमसमये सिद्ध एवेति ।

என்று கூறினவிடத்தில் விளங்கக் காணலாம். இதன் தாத்பர்யமாவது— வ்ருத்தி விகல்பம் செய்தவிடத்தில் க்ருத்ஸ்ந ஸமாப்தியே அதாவது ஜாதி முழுதுமே வ்யக்தியில் இருக்கிறதென்பதே அங்கீகரிக்கத்தகும். வேறு வ்யக்தியில் அது இல்லாமற்போகும் என்ற தோஷமில்லை. ப்ரத்யக்ஷமாகவே

அது இருப்பதை அறிகிறோமாதலின் (அது வேறு ஜாதியாக இருக்கக்கூடுமென்னில் கூடாது; அந்த ஜாதியே இது என்று (ஸாக்ஷப்ரமாணம்) முன்பே ஸாதிக்கப்பட்டதாதலின். இந்த ஜாதி அங்கிருப்பதைக்காட்டிலும் வேறானது என்ற (பாதக ப்ரமாணமான தோற்றம் இல்லவேயில்லை. (இனி) ஒரே ஜாதி இந்த வ்யக்தியிலுமிருக்கிறது மற்ற வ்யக்திகளிலுமிருக்கிற தென்றால் ஒவ்வொரு வ்யக்தியிலும் க்ருத்ஸ்நஸமாப்தி என்றதற்கு அர்த்தம் என்ன எனில் கூறுகிறோம்.- மற்றொரு வ்யக்தியில் ஜாதி தோன்றும்பொழுது முன் பார்த்த வ்யக்தியின் தோற்ற மின்றியே தோன்றுகிறது, பின்னால் பார்த்த வ்யக்தியை விட்டுத் தோன்றுவது முன்பார்த்த வ்யக்தியில் தோன்றும் பொழுது ஸித்தமே என்பது. இதனால் ஒரு வ்யக்தியில் ஜாதி க்ருத்ஸ்நவ்ருத்தி (அதாவது முழுதுமிருக்கிறது) என்றால் மற்ற வ்யக்திகளின் அபேக்ஷையில்லாமல் இந்த வ்யக்தியில் இருப்பதாகத் தோன்றுவது என்று அர்த்தம் என்றதாயிற்று. மற்ற வ்யக்திகளின் உதவியைத்தேடாது இந்த வ்யக்தியில் இருத்தல் எனவும் கூடும்.

இதுவே பரிஸமாப்தி என்பதும் இவ்வித பரிஸமாப்தி யைக்கருதியே ஜாதியை த்ருஷ்டாந்தமாக்கி ப்ரமஹமும் அப்படி ஒவ்வொரு வஸ்துவிலுமிருக்கலாமாகையால் கேள்விக்கு அவகாசமொன்றுமில்லை என்று தீபத்தில் ஸாதித்தது. ஒரு கார்ய வஸ்துவில் ப்ரம்ஹம் சரீரியாய் அந்தர்யாமியாய் இருப்பதற்கு மற்றொரு கார்ய வஸ்துவின் அபேக்ஷையில்லை ஒரு கார்யவஸ்துவைக் குறித்து இதைத் தனது சரீரமாக உடையது ப்ரம்ஹம என்று அனுஸந்திக்கும் போது மற்ற கார்ய வஸ்துவின் தோற்றமில்லை. இப்படி யிருப்பதே ப்ரம் ஹத்திற்கு ஒருகார்யவஸ்துவில் பரிஸமாப்தி. இதுவே ப்ரம்ஹ

ஸ்வரூபத்தைப் பற்ற பூர்ணதையும் 'அவையவைதோறும் அவ்வோர் பதார்த்தங்கள் தோறும் அவற்றிலே வ்யாபிக்குமிடத்தில், பல தூணுக்காக ஒரு உத்திரம் கிடந்தாற்போலே யன்றிக்கே ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாப்போலே எல்லாவற்றிலும் தனித்தனியே குறைவற வ்யாபித்து நிற்கும்' என்று 'திடவிசும்பின்' வ்யாக்யானாவஸரத்தில் ஈட்டில் ஸாதித்திருப்பதை இங்கே அநுஸந்திப்பது. பரிஸமாப்ய என்பதற்கு தனித்தனியே குறைவற என்பது விவரணம். இது ஏதான ஸாம்யத்தால் கொள்ளவேணும். இதுவே

**'निरंशे प्रतिपदार्थं पूर्णवर्तिन्यपि स्वरूपे अंशाद्व्यवहारः एकस्मिन्नेव वस्तुनि स्वरूपस्य पूर्णवृत्तितया अन्यत्र वृत्त्ययोग्यत्व-शङ्काव्युदासार्थः'**

என்று ஸ்ரீவேதார்த்த ஸங்க்ரஹ விவரணத்தில் ஸாதித்ததற்கும் திருவுள்ளம். 'பரிபூர்ண ஏவேச்வர:' என்ற ந்யாயஸித்தாஞ்சன ஸ்ரீஸூக்திக்கு

**'पर्याप्य वर्तत इत्यर्थः न द्वित्वादिवत् व्यासज्येति भावः'**

என்று ஸ்ரீரங்கராமாநுஜ ஸ்வாமி விவரணமிட்டிருப்பதை ஸ்மரிக்கவேணும்.

## 8

## कृत्स्नप्रसक्त्यधिकरणसारः ।

## (க்ருத்ஸ்ந ப்ரஸக்த்யதிகரணஸார:)

இப்படி நிரவயவமான ப்ரம்ஹத்திற்குப் பல வஸ்துக்களாகப் பரிணாமம் ச்ருதி சொன்னபடியால் ஒப்புக்கொள்ள வேணுமென்றும், விசேஷணமான ப்ரக்ருதிக்கே ஸாக்ஷாத்

பரிணாமமும், அதன் துவாராவாகவே ப்ரம்ஹத்திற்குப் பரிணாமமுமேற்பட்டுவதால் ப்ரம்ஹஸ்வரூபம் நிர்விகாரமென்பதற்கு விரோதமில்லையென்றும் சித்தும் அசித்துமாகிய இரண்டு சக்திகளும் அவற்றைத் தனது ஸங்கல்பப்படி நியமிக்கத்தக்க ஸாமர்த்தியமும் ஆகிய ஸர்வவிலக்ஷண சக்தி விசேஷங்கள் ப்ரம்ஹத்திற்கு உண்டென்றும், ப்ரம்ஹஸ்வரூபமும் கார்யவகையில் சேர்ந்திருந்தாலும் ஸத்வாரமாகவேயன்றி ஸாக்ஷாத் கார்யத்வமில்லாமையால் கார்யத்வப்ரயுக்த தோஷ சங்கைகள் இடம்பெறு வென்றும் அகண்டமான ஒரே ப்ரம்ஹம் எல்லாக் கார்ய வஸ்துக்களிலுமிருந்தால் ஒரு வஸ்துவிலும் பூர்ணமாக இராதே எனில் ஒவ்வொரு வ்யக்தியிலும் ஜாதி பூர்ணமாக விருப்பதுபோலவே அதுவும் இருக்குமென்றும் இவ்வித வைலக்ஷண்யங்கள் உள்ள சேதநம் ஒன்று நாம் காணுதிருக்க, இவைகள் ஒரு சேதநவஸ்துவிற்கு உண்டென்று சப்தப்ரமாணம் போதிக்கவல்லதோ வெனில் இச்சேதநவஸ்துவும் சப்த ப்ரமாணத்தாலேயே ஸித்திக்கும் பொழுது இவ்வைலக்ஷண்யங்கள் உள்ளதாகவே ஸித்திக்கக் குறையில்லை என்றும் कृत्स्नप्रसक्त्यधिकरणத்தின் ஸாராம்சம் நிஷ்க்ருஷ்டமாயிற்று.

9

## श्रीसारशास्त्रम् ।

இங்கு ப்ரம்ஹம் ப்ரதி வஸ்து பூர்ணம் அதாவது—परिसमाप्य वर्तते' என்று வ்யவஹரிக்கும்பொழுது 'परिसमाप्य' என்பதற்கு घटादि வஸ்துக்களில் ஒவ்வொன்றிலும் ரூபம் முதலிய குணம் தனித்தனியே அடங்கியிருப்பது போலவே ப்ரமஹமும் ஒவ்வொரு கார்யத்திலும் அடங்கி விடுகிறது என்று சிலர் எண்ணினார்கள். அதனால் தத்வஸ்திதியை

ப்ரதிபாதிக்கக் கருதி ஸ்ரீதேசிகன் 'வ்யாப்தனுக்கு ப்ரதி வஸ்து பூர்ணத்வமாவது ஓரொரு உபாத்யவச் [उपाद्यव च्छेद] சிந்தப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்லசக்தியுடைத் தாயிருக்கை, அல்லது வஸ்து தோறும் ஸ்வரூப ஸமாப்தி யன்று. இது கொள்ளில் பஹிர் வ்யாப்திக்கு விருத்தமாம். இத்தை अघटित घटना शक्ति யாலே நிர்வஹிக்கில் விருத்தஸமுச் சயங்கொள்ளும் பரமதங்களிற்படியாம், என்று ஸ்ரீமத்ரஹஸ் யத்ரயஸாரத்தில் ஸாதித்தார். வ்யாப்தன் விபு எங்கும்நிறை ந்தவன்) அநந்தம் என்கையாலே இதுஸித்தம். 'तेनेदं पूर्णम्' என்கையாலே பூர்ணத்வமும் கொள்ளவேணும். இரண்டும் ச்ருதிவாக்ய ஸித்தமாகையாலே ஒன்றுக்கொன்று விருத்த மாகாதே கொள்ளவேண்டும் விபுத்வம் அல்லது வ்யாப்தி என்பது எங்கும் நிறைந்திருக்கை என்று சொல்லப்பட்டது அதாவது இது இல்லையென்னும்படியான ஓரிடமுமற்றிருக்கை இதையே 'अन्तर्बहिश्च तत्सर्वं व्याप्य' என்று ச்ருதி ஓதிற்று. இப்படி விபுவான ப்ரம்ஹத்திற்கு ஒவ்வொருவஸ்து விஷயத்தி லும், அந்தர் வ்யாப்தியும், பஹிர் வ்யாப்தியும், ச்ருதி ஸித்த மாகையால் இதில் ஒன்றிற்கு பாதம் வரும்படி, மற்றொரு குணம் ப்ரம்ஹ ஸ்வரூபத்திற்குக்கொள்வது ந்யாய்யமன்று. இதையெல்லாம் ஸ்ரீதேசிகன் கீழ் எடுத்துக் காட்டப்பட்ட ஸ்ரீஸூக்தியால் விசதமாக ஸாதித்திருக்கிறார்.

"அயநமென்று வாஸஸ்தானமாய் அப்பொழுது பஹுவ் ரீஹிஸமாஸத்தாலே அந்தர்வ்யாப்தியும், தத்புருஷனாலே பஹிர்வ்யாப்தியும் தோற்றுகிறதென்றுமநுஸந்திப்பார்கள். இவையிரண்டும் ச்ருதி ஸித்தம். அந்தர்வ்யாப்தியாவது இவையுள்ளவிடத்தில் தன்னையில்லையென்ன வொண்ணாத படி கலந்து நிற்கை. பஹிர் வ்யாப்தியாவது இவையில்லாத

இடத்திலுமெங்கும் தானுளனுகை. விபுக்களான காலாதிகளுக்கு பஹிர்வ்யாப்தி சொல்லவேண்டா. 'नारायणमणीयां-समशेषाणामणीयसाम्' என்றது அந்தர்வ்யாப்திக்கநுகுணமாய் நிற்கிற ப்ரதிகாதாநர்ஹத்வமல்லது அணுபரிமாணத்வமன்று. 'இது சொல்லுமிடமுபாத்யவச்சேதத்தாலே யென்று ஸூத்ரபாஷ்யாதிஸித்தம்' என்று, விபுவாயிருக்குமீச்வரனே தனது சக்திவிசேஷத்தாலே அணுவாயுமிருக்கிறுனென்னக் கூடாதோ வென்று சங்கைக்குப் பரிஹாரமாக ஸூத்ரபாஷ்யாதிகளில் ஸாதித்த வர்த்தத்தை ஸ்மரிப்பிக்கிருர் இது சொல்லுமிடமித்யாதியால். லோகத்தில் அணுத்வமும் விபுத்வமும் விருத்த தர்மங்கள். ஒன்றிருக்குமிடத்தில் மற்ருென்றிராது. இது நிச்சிதமான விஷயம். இதை பாதித்து ஒரு ச்ருதி வாக்யமும் ப்ரவ்ருத்திக்கமாட்டாது.

'शास्त्रं शब्दविज्ञानादसन्निकृष्टेऽर्थे विज्ञानम्'

என்ற மீமாம்ஸா பாஷ்யத்திலுள்ள சாஸ்த்ர லக்ஷணத்தில் 'असन्निकृष्टे' என்ற பதத்திற்கு ப்ரயோஜனம்:

**असन्निकृष्टवाचा च द्वयमत्र जिहासितम् । ताद्रूप्येण परिच्छि-त्तिस्तद्विपर्ययतोऽपि वा ।**

என்ற வார்த்திக ச்லோகத்தால் சொல்லப்பட்டது. இது ச்ருதப்ரகாசியில் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. இது இவ்விதமானதென்ருே, இது இவ்விதமன்றென்ருே நிச்சயிக்கப்பட்ட விஷயங்கள் தவிர மற்ற விஷயங்களில்தான் வேதம் ப்ரமாணமென்று இதன் கருத்து. இது நம் ஸித்தாந்தத்தில் அங்கீகரிக்கப்பட்டதே. ஆகவே 'அணுத்வம் விபுத்வ ஸமாநாதிகரணமன்று' என்ற நிச்சயத்தைப் பாதித்து இவ்விரண்டு தர்மங்களும் ஈச்வரனிடத்திலுள்ளன வென்று போதிப்பதில் சாஸ்திரத்திற்குத் தாத்பர்யம் கொள்ள

வியலாது. ஆகையால் அணுத்வத்தை ஔபாதிகமாகவே உபபாதிக்கவேணுமென்று ஸூத்ரகாராதி தாத்பர்யமென்று கருத்து. இதுபோலவே பூர்ணத்வத்தையும் உபபாதிக்க வேணும். ஆகையால் வ்யாப்தனுக்கு என்று தொடங்கி சக்தியாலே பூர்ணதையை ப்ரதிபாதித்து ஸ்வரூபம் ப்ரதி வஸ்து அடங்கியிருத்தலே பூர்ணதை என்றால் அந்தர் வ்யாப்தி மாத்திரம் ஸித்திக்குமேயன்றி ச்ருதியிலே சொன்ன பஹிர்வ்யாப்தி ஸித்தியாதென்று விரோதத்தையும் காண்பித்தார். ஸ்வரூபம் ஒரு வஸ்துவிலடங்கிவிட்டால் அந்த வஸ்துவிற்கு வெளியில் அந்த ஸ்வரூபம் இருக்கமுடியாது. இருக்குமானல் அந்த வஸ்துவில் அடங்கிநிற்கிறது. அதாவது 'பரிஸமாப்தம்' என்பது சேராது. 'வெளியிலிராமல் அதிலேயே அடங்குகிறது. வெளியிலுமிருக்கிறது' என்பது விருத்தமென்று லோகத்தில் நிச்சயிக்கப்பட்ட விஷயம். இதற்கு மாருக ச்ருதி ஒன்றும் சொல்லமாட்டாது. ஆகையால் ஸ்வரூபத்தையிட்டுப் பூர்ணதையைச் சொல்ல இயலாது. குணத்தையிட்டுச் சொல்லவேணும். ப்ரமாணங்களுடையவும் **तदनुग्राहक** ந்யாயங்களுடையவும் ப்ரவ்ருத்தி ப்ரகாரங்களை நிரூபியாமல் ஒரு நிஷ்கர்ஷம் செய்தால் இது நாமாகச் செய்ததாகி பாஹ்யமத துல்யமாம் என்று திருவுள்ளம். '**अत्र समस्तगुणविशिष्टत्वं**' என்று ந்யாய ஸித்தாஞ்சனத்திலும் இது க்ஞாபிதம்.

**कथं तर्हि भवत्पक्षे शरीरभूतेषु चिदचिद्वस्तुषु परमात्मनः पूर्णत्वम् । अणुमात्रेऽपि वस्तुनि स्थितस्य निरवधिकषाड्गुण्यविशिष्टतया प्रतिपत्तियोग्यत्वमिति ब्रूमः । तच्च शास्त्रबलादभ्युपेतम् ।**

என்ற ச்ருதப்ரகாசிகையையும் இங்கே அநுஸந்திக்கவேணும்.

'பூர்ணம்' என்கையாலே எல்லாகுணங்களும் புஷ்கலங்கள் என்று ஸ்ரீவசந பூஷணத்தில் ஸாதித்தவிடத்திலும் இதே அபிப்ராயம். ஸ்வரூபம் அநந்தமாதலால் அதற்கு அர்ச்சாவதாரத்தில் परिसमाप्ति ரூபமான பூர்ணத்வம் சொல்ல முடியாது குணத்தினுல் பூர்ணத்வம் கொண்டபொழுது ஒரு விரோதமுமில்லாததோடு எல்லாமுபபந்நமுமாகிறது என்றபடி.

'அநந்தனுகையாவது - நித்யனுய் சேதநாசேதநங்களுக்கு வ்யாபகனுய் அந்தர்யாமியாயிருக்கை' என்று தத்வத்ரயத்திலும் एतद्विवरणமாக தத்வ்யாக்யானத்திலும் ஸாதித்திருப்பதும் இப்படியே உபபந்நம். வ்யாபகமான ஸ்வரூபத்திற்கே அந்தர்யாமித்வம் ப்ரதிபாதிதமாயிற்று. 'அந்தர்யாமித்வம் இரண்டுபடிப்பட்டிருக்கும்' என்று அர்த்த பஞ்சகத்திலும் மற்றவிடத்திலும் திவ்ய மங்கள விக்ரஹத்தோடு மற்ருெரு விதமான அந்தர்யாமித்வம் உண்டெனப்பட்டது. ப்ரதி வஸ்து ரூபாதிகள்போல் 'ப்ரஹ்மஸ்வரூபம் பரிஸமாப்தம்' என்ருல் மூன்ருவது விதமான ஒரு அந்தர்யாமித்வம் ப்ரஸங்கிக்கும். அப்பொழுது இரண்டுபடி என்றது விரோதிக்கும்.

ஸ்வரூப விஷயமாகவே பூர்ணத்வம் உபபாதிக்கவேணுமாஞல் முன் நிரூபித்தபடி மற்ருெரு வஸ்துவின் அபேக்ஷையில்லாமலே ஒரு வஸ்துவிற்கு அந்தர்யாமியாயிருக்கையே அது என்று கொள்ளவேண்டும். ஆக இந்த விஷயத்தில் பூர்வாசார்யர்கள் எல்லோரும் ஏககண்டர் என்பது ஸ்பஷ்டம்.

## 10

## நாயனுராச்சான்பிள்ளை

நாயனுராச்சான்பிள்ளையின் 'சது ச்லோகீ' வ்யாக்யானத்தில் கண்டனம்போல் சில வார்த்தைகள் காணப்படு

கின்றன. அதில் பூர்வபக்ஷம் ஒன்றை உபபாதிக்கும் பொழுது—

'விபுவான ஈச்வரனுக்கு உபாத்யவச்சேதமாத்திரத்தாலேயிறே அணுத்வவிபுத்வங்கள் (அணுத்வத்தை வசனங்கள்) சொல்லுகின்றன. ஸ்வரூபத: அணுத்வம் சொல்லவொண்ணுதிறே. அகடிதகடநா சக்தியாலே அணுத்வ, மஹத்வரூப விருத்தஸமுச்சயம் கூடுமென்னில் அப்போது ஸர்வாத்வைத பேதாபேத பக்ஷங்களுமங்கீகார்யங்களாமிறே. ஆகையாலே ப்ரதி வஸ்து பூர்ணத்வமாவது ஓரொரு உபாத்யவச்சிந்ந ப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியை யுடைத்தாயிருக்கை. இங்ஙனமன்றிக்கே அந்தர்வ்யாப்தியை ஸ்வரூப ஸமவ்யாப்தி-(ஸமாப்தி) என்றங்கீகரிக்கும்போது பஹிர்வ்யாப்தி சேராது. கிஞ்ச, நிரவயவமான ஆத்மாவுக்கு ஷட்பாவ(க)ராஹித்யத்தாலே உள்ளென்றும், புறம்பென்றும், ஒரு வ்யவஹாரம் கூடாமையாலே, அந்தர்வ்யாப்தியே அ[ந]ங்கீகார்யம்' என்று ஸ்ரீதேசிக ஸ்ரீஸூக்தி ப்ரத்யபிக்ஞை வரும்படி ப்ரதிபாதித்துப் பிறகு ஸித்தாந்தத்தில்—

1. வ்யாப்ய வ்யாபகங்களான ஜீவேச்வர ஸ்வரூபங்கள் க்ஞானமயங்களாகையாலே தேஜோத்ரவ்யங்களாய் அதிஸ்வச்சங்களாய்க்கொண்டு, ப்ரதிகாதா பாவத்தாலே அந்யோந்யமந்த:ப்ரவேசிக்கை உபபந்நமிறே.

2. ஆனபின்பு நியந்தாவான ஸ்வரூபம் நியாம்ய ஸ்வரூபத்துக்குள்ளே அந்தராத்மதயா ப்ரவேசிக்கை மிகவும் உபபந்நமாகையாலே ஜாதிவ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாப்போலே 'पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते'

என்று ச்ருதிப்ரஸித்தமான அகடிதகடனா சக்தியாலே வ்யாவ்ருத்த வஸ்துக்கள்தோறும் ஸ்வரூபேண பரிஸமாப்ய வர்த்திக்கக் குறையில்லையிறே.

3. இப்படி ச்ருதி ப்ரஸித்தமாய் யுக்தி யுக்தமுமான அந்தர்வ்யாப்தி பஹிர்வ்யாப்திக்கு விரோ(ருத்)தமாகாமையாலும் விருத்தஸமுச்சய பக்ஷங்களில் விருத்த ஸமுச்சயநிபந்தனமாக ஈச்வரனுடைய அகடிதகடனா சக்தியைக் கொள்ளாமையாலே பரபக்ஷத்தின்படி யாகாமையால் அது தத்ப்ரதிபந்தி யல்லாமையாலும் அகடிதகடனா சக்தியாலே அணுக்கள்தோறும் பரிஸமாப்யவர்த்திக்கிறுப்போலே.

என்று ப்ரதிபாதிக்கப்பட்டது. இதில் முதல் அம்சம்:

அந்தர்வ்யாப்தியாவது இவையுள்ளவிடத்தில் தன்னையில்லையென்ன வொண்ணாதபடி கலந்து நிற்கை.

என்று ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும்

ஸர்வத்திலும் சிறியனான ஜீவாத்மாவுக்கு உள்ளென்று ஒரு ப்ரதேசமில்லை, விபுக்களான காலாதிகளுக்கு புறம் பென்றொரு ப்ரதேசமில்லை. இப்படியிருக்க ஈச்வரன் எல்லாவஸ்துக்களையும் உள்ளும் புறமும் வ்யாபித்து நிற்கிறானென்கை கூடுமோவென்றில் இப்படிச் சொல்லுகிற வாக்யங்களுக்கு ஸர்வ த்ரவ்யங்களிலும் ஈச்வரனில்லாத ப்ரதேசமில்லையென்கையிலே தாத்பர்யமாகையாலே இங்கு ஒரு விரோதமுமில்லை.

என்று விரோத பரிஹாரத்திலும்,

ஸர்வ வ்யாப்தி சொன்னவிடத்தில் அந்தர் வ்யாப்தியாவது—நிரவயவங்களோடு ஸாவயவங்களோடு வாசியற அவனுள்ளவிடத்தில் இவனில்லை என்னுதபடி ப்ரதிகாத மற்று நீங்காதே நிற்கை.

என்று பரமதபங்கத்திலும் ஸ்ரீதேசிகன் ஸாதித்ததோடு ஸமானம். ப்ரதிகாதியான கடம் இருக்குமிடத்தில் படம் இருக்கமாட்டாது. இப்படியன்றி அணுவான ஜீவனிருக்கு மிடத்திலும் விபுவான ப்ரஹ்மஸ்வரூபம் வ்யாபித்திருக்கும். இதுவே அந்தர்வ்யாப்தி என்று உபய ஸம்மதம்.

இரண்டாவது அம்சம் ஸ்ரீந்யாயஸித்தாஞ்சனத்தில்

**बहुसम्बन्धादेव तत्तत्सम्बन्धावच्छेदेनांशत्वं स्यादिति चेन्न। बहु-गुणव्यक्तिप्रतियोग्यादिविशिष्टेषु द्रव्यजातिनिषेधादिषु तैस्तैस्तद-नभ्युपगमात्**

என்று ஈச்வர பரிச்சேதத்திலும்

**यद्वा यन्निरवयवं तन्नैयायिकाद्यभिमतजातिवत् सर्वत्र संयोगिनि सम्पूर्णं वर्तताम्। तदेतत् सूत्रकारैरेवाशङ्क्य परिहृतम्। कृत्स्न-प्रसक्तिर्निरवयवत्वशब्दकोपो वेत्यादिना। तत्र च दीपः ... ... । एतेन प्रधानपरमाणुवासनासंविद्ब्रह्मप्रभृतीनां यथा भागपरिणा-मावरणानावरणानेकविषययोगादिरुपपद्यत इत्युपरम्यते।**

என்று அத்ரவ்ய பரிச்சேதத்திலும் நிரூபிதமாயிற்று. 'ஜாதி போலே பரிஸமாப்தமென்கையாலே ப்ரதித்ரவ்யம் த்ரவ்யாந்தர நிரபேக்ஷ வ்ருத்தியே ஸம்பூர்ண வ்ருத்தி யென்றும், பரிஸமாப்ய வ்ருத்தி யென்றும், இவ்விடங்களிலெல்லாம் கருதப்பட்டதென்பது ஸ்பஷ்டம். இவ்வித ஸ்வரூப ஸமாப்தி யன்று, 'வஸ்துதோறும் ஸ்வரூப ஸமாப்தியன்று. இது கொள்ளில் பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாம்' என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் நிஷேதிக்கப்பட்டது. பின் ப்ரும்ம ஸ்வரூபம் முழுதுமே கார்யவஸ்துவில் ஒவ்வொன்றிலும் அடங்கி நிற்கும் என்றிவ்விதமான ஸ்வரூப ஸமாப்தி நிஷேதிக்கப்பட்டது. இது ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் '**अत्रैव वर्तमानत्वं**' என்றெடுத்து நிஷேதிக்கப்பட்டது.

*இதில் ப்ரதி வஸ்து பூர்ணத்வம் ஜ்ஞாநசக்த்யாதி ஸங்கோசாபாவத்தாலே கண்டுகொள்வது. ஈச்வரனுடைய ஸர்வ ஸ்வரூபமும் அல்ப பரிமாணமான ஏகத்திலே அடங்குமென்னும் பக்ஷத்தில் பஹிர்வ்யாப்தி சொல்லவொண்ணாது. அணுத்வ விபுத்வாதிகளை அகடிதகடநா சக்தியாலே ஒரு காலேயாதல், க்ரமத்தாலேயாதல் கொண்டால் பேதாபேதபக்ஷங்களைக் கழிக்க விரகில்லை*

என்ற பரமதபங்க ஸ்ரீஸூக்தியால் ஸ்பஷ்டம். ஈச்வரனுடைய ஸர்வ ஸ்வரூபமும் ஒவ்வொரு வஸ்துவிலும் அடங்கி நிற்கிறதென்று நம் ஸம்பரதாயங்களில் ப்ராசீன ஆசார்யர் ஒருவருக்கும் அபிமதமன்று. ஆபாத த்ருஷ்டியாய் ஒருவரும் இப்படி ப்ரமிக்கவேண்டாமென்பதற்காகவே ஸ்ரீதேசிகன் இதை இப்படிப் பலவிடங்களிலும் நிரூபித்தது ஜீவாத்மா தனது போகாயதனமான ஒருசரீரத்தில் வர்த்திக்கிறான். சரீரம் மிகச் சிறியதாயினும் அதில் ஸுகமாகவே இருந்து அவன் போகங்களைப் புஜிக்கிறான். யானைசரீரத்தில் இருப்பதால் கொஞ்சம் ஸௌகர்யத்தோடு இருக்கிறான் என்பதும் தம்சமசகாதி சரீரங்களில் க்லேசத்தோடு வர்த்திக்கிறான் என்பதுமில்லை.

ஜீவாத்மா விபு என்று நையாயிகாதிகள் சொல்வர். அதேபோல விபுவான ஸர்வேச்வரனும் அணுவிலும் ஒரு வித ஸங்கோசமில்லாது வர்த்திக்கிறான் என்பதில் விரோதமொன்றுமில்லை. 'பரந்ததண் பரவையுள் நீர் தொறும் பரந்துளன்'

மூன்றுவதில் 'இப்படி ச்ருதி ப்ரஸித்தமாய் யுக்தி யுக்தமுமான அந்தர்வ்யாப்தி பஹிர்வ்யாப்திக்கு விருத்தமாகாமையாலும்' என்றதால் விருத்தமான ஸ்வரூபஸமாப்தி

யில் பர்யவஸிக்கும் அந்தர்வ்யாப்தியை யங்கீகரியாது அவி ருத்தமான அந்தர்வ்யாப்தியே அங்கீகரிக்கப்படுகிறதென்ற தாயிற்று. ஆகையால் ஸ்ரீதேசிகன் அநுபபந்நமென்று ஸாதி த்த ப்ரகாரத்தை த்யஜித்து உபபந்நமென்று பரிக்ரஹித்த ப்ரகாரமே நமக்குமபிமதமென்றாரிவர். இதற்குமேல் 'விரு த்தஸமுச்சய பக்ஷங்களில்' என்றாரம்பித்துச் சொன்னது பாஹ்யமதங்களைக் காட்டிலும் விசேஷங்காட்டிற்று. 'வேதாந்திகளாகவேயிருந்து விருத்தஸமுச்சயங் கொள்ளும் பாஸ்கராதி மதங்களில்போல பேதாபேதங்கொண்டு அதற்கு நிபந்தனமாக ஈச்வர சக்தியை ஆச்ரயித்து பேதாபேத ஸித் தாந்தமே ஏன் இருக்கக்கூடாது. ஈச்வரன் ஸர்வசக்தனாகை யால் பேதமிருக்கும்போதே அபின்னனாகவுமாகிறான். ஸ்வரூப பரிணாம முண்டானாலும் நிர்விகாரனாகவே யிருக்கிறான். அப்படியே அகிலஹேய ப்ரத்யனீகனாகவுமிருக்கிறான்' என் றிப்படி நம்மைப்பார்த்து ஒரு சோத்யம் செய்தால் 'விருத்த ஸமுச்சயம் எவ்விதத்திலும் நாம் கொள்வதில்லை' என்பதை விட்டு இதற்குப் பரிஹாரம் துர்வசம். இதனாலேயே பரமத பங்கத்தில் பேதாபேத பக்ஷங்களைக் கழிக்க விரகில்லை' என்று ஸாதித்தது. ஆகையால் 'விருத்தமாகாமையாலும்' என்று முதலில் சொன்ன அவிரோதாம்சத்திலேயே க்ரந்தகாரருக்கு நோக்கு இப்படி விபுவாயிருக்குமாகில் 'அணோரணீயாந்' இத்யாதிகளிலே இவனை அணீயாந் என்று சொல்லா நின்றதே. இஃதெங்ஙனே என்னில் அர்ப்பகௌகஸ்த்வ ந்யா யத்தாலே அணுக்களிலே வர்த்திக்கையாலேயாதல் அன்றி க்கே ஸ்வச்சதையாலே யாகக்கடவது. அர்ப்ப கௌகஸ்த்வ ந்யாயமாவது சிறியத்தை யிருப்பிடமாக உடைத்தானதை சிறியதென்று சொல்லக்கடவதென்கை; என்று இவர் தத்வ ஸங்க்ரஹத்தில் ப்ரதிபாதித்ததையும் இங்கே அனுஸந்திப் பது.

இப்படி நாயனாராச்சான் பிள்ளை ஸித்தாந்தத்தில் சொன்ன மூன்றம்சங்களும் ஸ்ரீதேசிகன் திருவுள்ளத்திற்கு அநுகுணமானவையே. பூர்வபக்ஷத்தில் ஈச்வர ஸ்வரூபத்திற்கு அணுத்வமௌபாதிகமென்றதுவும் குணங்களையிட்டுப் பூர்ணத்வம் சொல்லவேணுமென்றதுவும் அணுவுக்கு அவயவங்களில்லாமையாலே உள் என்பதொன்றில்லையென்றதுவும் ப்ரதிக்ஷேபமில்லாமையாலும் அவைகளுக்கு விரோதமில்லாமலே ஸித்தாந்தத்தை உபபாதிக்கையாலும் ஸித்தாந்தத்திலும் அங்கீகரிக்கப்பட்டனவே. ஆகையால் இவ்வாசாரியர்கள் எல்லோரும் க்ருத்ஸ்நப்ரஸக்த்யதிகரண ஸித்தாந்த நிர்வாஹ ப்ரகாரத்தில் ஏககண்டர்கள்.

## 11

## நரஸிம்ஹத்வம்.

இனி நரத்வமும் ஸிம்ஹத்வமும் உலகத்தில் பரஸ்பர விருத்தங்களாய் காணப்படாநிற்க இவை இரண்டும் ஒரு ந்ருஸிம்ஹ விக்ரஹத்தில் இருக்கையால் நாமும் விருத்தஸமுச்சயம் கொள்ள வேண்டாவோ, கொள்ளும்போதும் அது ஸர்வேச்வரனுடைய அகடிதகடநா சக்தியாலே என்று கொள்ளவேண்டாவோவெனில் ப்ராக்ருத ப்ராணிகளான நரர்களிடத்தும் ஸிம்ஹங்களிடத்தும் தனித்தனியே உள்ள நரத்வம் ஸிம்ஹத்வம என்ற இரண்டு ஜாதிகளும் சேர்ந்து ஸ்ரீந்ருஸிம்ஹனுடைய திவ்யமங்கள விக்ரஹத்தில் இருந்தன வென்று கூறும் நையாயிகர்களோ மற்ற ஸித்தாந்திகளோ எவருமில்லை. மற்றவிடங்களில் தனித்தனியே இருக்கிற இரண்டு ஜாதிகள்சேர்ந்து ஓரிடத்திலிருக்குமாகில் ஸங்கரமென்ற ஜாதி பாதகர்தால் அவைகள் ஜாதிகளாகமாட்டா. ந்ருஸிம்ஹத்வமென்பது தனித்த ஒரு ஜாதியோ உபாதியோ

நரனுயிருப்பவனுக்கு ஸிம்ஹஸாத்ருச்யமோ என்பர். அச்வ முகராயும் அச்வசரீரராயுமிருக்கும் தேவயோகி விசேஷங்களுக்கு இந்நரத்வ கிம்புருஷத்வாதி விலக்ஷண ஜாதியேயல்லது நரத்வாச்வத்வாதி ஸமாவேசமன்று. वस्तुतः ஜாதி ஸங்கரம் தோஷமன்று. இதை தோஷமாகக்கொள்பவர் நையாயிகாதிகள். நம் ஸித்தாந்தத்தில் இதை அங்கீகரிக்கவில்லை. ஆனால் ஒரு பாகத்தில் ஸிம்ஹத்வமும், மற்றொரு பாகத்தில் நரத்வமும் வ்யவஸ்திதமாகவே யிருப்பதால் விருத்தஸமாவேசமில்லை. இதெல்லாம் ஸ்ரீ ந்யாயஸித்தாஞ்ஜநத்தில் ஸ்பஷ்டம். பெருமானுக்கு ஹயக்ரீவாதி அவதாரத்திலும் இவ்வித வைலக்ஷண்யமுண்டு. இவையெல்லாவற்றிலும் விலக்ஷணம் ந்ருஸிம்ஹரூபம். பரியனுகி வந்தவவுணனுடல் கீண்டற்குரிய வித்தகைய உருவமெடுக்க அமரர்க்கரிய அவ்வாதிப்பிரானையல்லால் மற்ற யார்க்குக் கூடுமென்று பக்தி பரவசர்களாய்ப் பெரியோர் அநுபவிப்பர்.

மறையின் அந்தி மொழிந்திட்ட மெய்யை
முனிவன் காட்டி வத்
துறையின் சீர்மை நாட்டலுற்றான் தகவால்
மிக்க யதிவரன் அம்
முறையின் நுட்பம் யாரறிவார் மயர்வோன்
றில்லா நம் தூப்புல்
இறைவன் தோன்றி யிவ்வுலகில் இருந்து
விளங்க வைத்திலனேல்.

**ஸர்வ சக்தி முற்றிற்று.**

# திருத்தம்.

| பக்கம். | வரி. | சுத்தம். |
|---|---|---|
| 1 | 11etc. | ப்ரஹ்மம் |
| 2 | 19 | லென்னும் |
| ,, | 24 | பொருள். ஆ |
| 4 | 4 | என்றதாகும் |
| 6 | 2 | தொடங்கி |
| ,, | 5 | பருந்தது |
| ,, | 6 | பருமன் |
| 7 | 4etc | ஜ்ஞாக |
| 8 | 21 | नतिशङ्क्य |
| 10 | 2 | மண்பாரத்திற்கும் |
| 13 | 6 | ஓர் |
| 14 | 18 | सुपाल |
| 15 | 19 | ஓர் |
| ,, | 20 | விற்குக் |
| 17 | 12 | "நாங்கள் |
| ,, | 16 | ஸந்தேஹமென்ன ?" |
| ,, | 20 | மில்லாத |
| 19 | 25 | அவயவி |
| 20 | 14 | என்னும் |
| ,, | 18 | जातिः |
| 22 | 2 | அவ்வோ |

| | | |
|---|---|---|
| 22 | 11 | निर्हे |
| ,, | 19 | கவனிக்க |
| 24 | 2 | उपाध्यवच्छिन्न |
| 25 | 8 | என்ற |
| 31 | 8 | ஸ்ரீ ஸூக்தியால் இது |
| ,, | 13 | "ஜீவாத்மா |
| ,, | 19–20 | என்பதுமில்லை என்று<br>ஜீவாத்மா விபு என்ற |
| 32 | 18 | 'பேதாபேத |
| ,, | 21 | நோக்கு. "இப்படி |
| ,, | 25 | யாலேயாதல் ஆ |
| 34 | 3 | ஙிக்நரத்வ |
| ,, | 10 | எம்பெரு |
| ,, | 17 | காட்டிட |